*Kumaraṉ*

*Āram 16, muttu 7*

*September 29, 1938*

Record no. 313

REG NO. M. 1823. KUMARAN WEEKLY. TELEPHONE டெலிபோன் 40

சந்தா விவரம்
உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5–0–0
ஆறு மாதம் 3–0–0
சிலோன் ரூ. 6–0–0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு
ஷ 1-க்கு ரூ. 7–0–0

# குமரன்

விளம்பரம்.
நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2–0–0
வியாபார சம்பந்தமானது ரூ. 0–12–0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கு எழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் மாதப் பதிப்பும் சேர்ந்தது. PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 16. காரைக்குடி, வெகுதானிய-ஷ புரட்டாசி-மீ 13-உ (29—9—38) முத்து 7

## தமிழ்த் தென்றல்

### பிள்ளைப் பருவம்

மக்களின் பருவத்தில் பிள்ளைப் பருவமே சிறப்புடையதாக இருக்கிறது. பிள்ளைகளிடம் அன்பு கொள்ளாதவர் யாரும் இருக்கமாட்டார். கல்லும் மண்ணும் தவிர மற்ற உயிருள்ள எந்தப் பிராணியும் பிள்ளைகளிடத்துப் பேரன்பு கொள்கின்றன. புலி கரடி போன்ற கொடிய மிருகங்களும் குட்டிகளிடம் பேரன்பு காட்டுவதைக் காணலாம். பிராணிகளின் அன்பிலும் ஆர்வத்திலுமிருந்தே பிள்ளைகளின் தோற்றம் ஏற்படுகிறது.

* * *

மற்ற பல வகையில் மக்கள் உயர்வடைந்திருப்பது போல் பிள்ளையின்பத்தை நுகர்தலிலும் பெருமை பெற்றிருக்கின்றனர். அறிவு வளர்ச்சி பெறும் பெரிய மனிதர்களைக் காட்டிலும் பிள்ளைகள்பால் மக்கள் மனம் பற்றுவதற்குக் காரணமிருக்கிறது. பச்சைப் பசுங் குழந்தையினிடம் யாருக்கும் துவேஷமில்லை; போட்டியில்லை; பொறாமையில்லை. குழந்தைக்கும் யாரிடத்தும் பகையில்லை; எதிலும் பற்றில்லை; பிறருக்குத் தீங்கென்பதேயில்லை. இந்தக் காரணங்கள் முக்கியமானவை. தவிர இளம் குழந்தைகளின் செயல் புதியன. அதன் களங்கமற்ற தோற்றம்! பரிசுத்தமான சிரிப்பு! புதிய உடல்! பால் மணக்கும் வாய்! திருந்தாத மழலைமொழி! இவை நெருங்குவோரின் உளத்துக்கு நல்விருந்தாகி நிற்கின்றன.

* * *

குழந்தைகளின் இன்பத்தைப், பெற்றோர் தான் உணருகிறார்களென்பதில்லை. ஒரு அழகான குழந்தை கூர்மையான புத்தியுடன் விளங்குமானால் அந்தக் குழந்தையைத் தொடாமல் செல்ல முடியுமா? அதைவிட்டு எளிதாகப் பிரியத்தான் முடியுமா? கல்மனமுள்ள பரமலோபியும் ஒரு குழந்தையைப் பெற்றால் கரைந் துருகுவதைக் காணலாம். எவ்வளவு சுயநலப் பிண்டமாக இருந்தாலும் குழந்தைக்கு முன் தியாகம் உதயமாவது திண்ணம். இப்படிப்பட்ட பிள்ளைப் பேற்றைப் பற்றி நமது தமிழ்க் கவிகள் பலர் இன்பமயமாக அனுபவித்துப் பாடியிருக்கின்றனர்.

* * *

சிவப்பிரகாசர் ஒரு சன்யாசி. அவர் பிள்ளையைப்பற்றிக் கூறுகிறார். பெண் குழந்தை பெறுபவர் வளர்க்கும் முறையை உரைப்பது படித்துணரத் தக்கதாக இருக்கின்றது. உலகத்தில் பெற்றதாய், தான் பெற்ற அருங்குழந்தையை எப்படி வளர்க்கிறாளென்பதே இக்கவிகளின் கருத்தாக இருக்கிறது.

மாயைப் பெயர்கொள் மகவை நறும்
  மஞ்சள் திமிர்ந்து கணைக்காலில்
ஏயக் கிடத்தி நீராட்டி
  இணைக்கண் உந்தி நீரூதி
நேயத் துகிலின் மெய்துடைத்து
  நெகிழ் மென் முலையோ டுறத்தழுவி
வாயில் திவலைகோடு தேய்த்து
  மண்பொட் டணிந்து நீறிட்டு

மாயை என்ற பெயருடைய அந்தச் சிறு குழந்தையின் உடலில் அரைத்த மஞ்சளைப் பூசினாள். கால்களை நீட்டி இருந்து கொண்டு கணைக்காலில் கிடத்திக் குளிப்பாட்டினாள். கண்களிலும் கொப்புழிலும் ஊறி தங்கியிருந்த நீரைப் போக்கினாள். மெல்லிய துணியினால் உடலைத் துடைத்தாள். குழந்தையை எடுத்து மார்போடு தழுவி வாயில் நீர் கொண்டு தேய்த்தாள். பூமியைத் தொட்டுப் பொட்டுவைத்தாள். விபூதியையும் பூசினாள்.

கண்ணிற் கமைய மையெழுதி
  காற்குச் சதங்கை பொற்றண்டை
நண்ணப் புனைந்து பொன்னரைஞாண்
  நடுவிற் பூட்டிப் புலியுகிர் சேர்
வண்ணப் பசும்பொன் அணி மார்பில்
  வனைந்து சிறுமென் தொடிசேர்த்தி
பெண்ணிற் கரசி திருநுதல் பொற்
  பிறைமேற் சுட்டி ஒன்றணிந்து

அடுத்தபடியாக அந்த மாயைப் பெண்ணுக்கு நகை அணிவிக்கப் படுகிறது. கண்ணுக்கு மை எழுதினாள். காலில் சதங்கையும் தண்டையும்; தங்க அரைஞாண் ஒன்று; தங்கச் சங்கிலியொன்று புலிநகம் கோர்த்து கழுத்துக்கு; கைகளில் சிறிய வளையல்; நெற்றியாகிய தங்கச் சந்திரனுக்கு மேலே ஒரு சுட்டியும் அணிவிக்கப் பெற்றது.

* * *

இந்த அலங்காரங் கட்குப் பின் நிகழ்ந்த தென்ன? அழகுத் தெய்வமான மாயைக் குழந்தைக்குத் திட்டி போக்கினாள். போக்கிப் பாலூட்டினாள். அப்பால் அழகான பவளக்கால் பசு பொன்னாலான தொட்டிலில் படுக்க வைத்துத் தாலாட்டித் தூங்கவைக்கிறாள்.

போக்கும் பொருளால் கண்மிச்சில்
  போக்கி அன்பால் முலையூட்டி
தூக்கும் பவளக்காற் பசும்பொன்
  தொட்டில் மலியக் கிடத்தியே
பார்க்கும் சுவைவான் அமுதமே!
  பார்வேந்தனியே! என் துயரம்
தீர்க்கும் கரும்பே! கண்மணியே!
  திருவே! என்று சீராட்டி

தாலாட்டும்நயம் கவனிக்கத் தக்கது. "கண்ணால் காணக்கூடிய தேவாமிர்தமே; பார் வேந்தனது மகளே! பிள்ளையில்லாத துயரத்தைத் தீர்த்த கரும்பே! கண்ணின் பயனான கண்மணியே; என் செல்வமே" என்று கனிகின்றாள்; சீராட்டுகின்றாள்.

* * *

இப்படிச் செய்ததாய் இன்னும் அந்தச் செல்வக் குழந்தையை எப்படி வளர்த்து வந்தாள் என்பதைப் பொதுவாக ஆசிரியர் உரைக்கிறார்.

மிடியன் ஒரு செய்யாளன் அச்செய்
  விளையக் காக்கும் செயல்போல,
படியில் கல்வி விரும்பினோன்
  பாடம் போற்றும் அதுபோல,
ஓடிவில் செங்கோல் மனுவேந்தன்
  உலகம் புரக்கும் முறைபோல,
கொடிய நோன்பு செய்து ஈன்ற
  கொடியை வளர்த்தாள் மோகினியே

ஒரு ஏழை. அவனுக்கு ஒரே ஒரு செய் தான் உண்டு. அது நன்றாக விளைந்திருந்தால் அதை எப்படிக் காப்பாற்றுவான், அப்படிக் காத்தாளாம் இக்குழந்தையை. படிப்பில் முழுவிருப்பங் கொண்ட மாணவன் எப்படிக் கேட்ட பாடத்தை வழுவ விடாமல் உருவேற்றிப் பாதுகாப்பானோ அப்படியுங் காத்தாளாம். நீதியுணர்ந்து அன்பு கனிந்து நேர்மையான ஆட்சிபுரியும் ஓரரசன் உலகமக்களை எப்படிக் காப்பாற்றுவானோ அப்படிக் காப்பாற்றினாள்.

(2-ம் பக்கம் பார்க்க)

## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திற்கும் பினங்குக்கும்

(ஏஜெண்டிடமிருந்து)

**வருதல்**

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகபட்டணத்துக்கு வரும் தேதி வருமாறு:—

ரஜூலா 8476 டன் 29—9—38
ரோணு 8602 டன் 13—10—38
ரஜூலா 8476 டன் 27—10—38

**புறப்படுதல்**

கப்பல்கள் நாகபட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

ரஜூலா 8476 டன் 8—10—38
ரோணு 8602 டன் 22—10—38

**பிரஞ்சு மெயில்**

புதுச்சேரியிலிருந்து சிங்கப்பூர், சைகோன் புறப்படும் கப்பல்கள்:-

டி ஆர்டக்னன் 24—10—38
ஸ்பிங்ஸ் 21—11—38

பிரெஞ்சு மெயில் விவரங்களுக்கு:—
H. B. ஹுஸேன் & சன்ஸ்,
கப்பல் ஏஜண்டுகள், புதுச்சேரி.

**P. & O. மெயில்**

கொழும்பிலிருந்து, நேராக பினுங்குக்குப் புறப்படும் கப்பல்களின் விபரம் வருமாறு:—

ராண்புரா 17,000 டன் 2—10—38
ராவல்பிண்டி 17,000 டன் 16—10—38

## நடப்பு வட்டி விகிதங்கள்.

| மாதம் | நாள் | சென்னை | [illegible] | பினங்கு | சிங்கப்பூர் | சைகோன் |
|---|---|---|---|---|---|---|
| ஈஸ்வர புரட்டாசி | 30 | 0-5-6 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| ஐப்பசி | 30 | 0-5-6 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| கார்த்திகை | 29 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| மார்கழி | 30 | 0-6-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| தை | 29 | 0-6-0 | 0-4-9 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| மாசி | 30 | 0-7-0 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| பங்குனி | 30 | 0-7-3 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| வெகுதானிய சித்திரை | 31 | 0-7-3 | 0-4-6 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| வைகாசி | 32 | 0-7-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆனி | 31 | 0-6-9 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆடி | 32 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆவணி | 31 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

என்று கூறுகிறார். பிள்ளையைப்பேரன்புடன் தாய் வளர்த்தலை உணர்த்த வந்த சிவப்பிரகாசர், படிப்பை எப்படி மாணவர் போற்றவேண்டு மென்பதையும், அரசன் எப்படி ஜனங்களைக் காக்கவேண்டு மென்பதையும் தெளிவு பெற எடுத்துக் கூறிவிட்டார். அந்தக் குழந்தைக்கு வேண்டிய நலனை யெல்லாம் அது சொல்லாமலே, தான் நினைந்து நினைந்து செய்யும் தாயைப் போல மன்னன் இருத்தல் வேண்டுமென்று கூறும் நயம் அநுபவித்தறியத்தக்கதாகும். இதனை மாணிக்க வாசகர் திருவாசகத்தில் "பால் நினைந் தூட்டும் தாயினும் சாலப்பரிந்து" என்று கூறுவது இங்கு ஞாபகப்படுத்த தக்கதாகும்.

S. M.

## சென்னை ரேடியோ

(ஸெப்டம்பர் 29௳ முதல் அக்டோபர் 6௳ வரை)

### வியாழன் 29௳

மாலை
5-30 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி
5-40 ஸ்ரீமதி நாகாம்பாள் வாய்ப்பாட்டு
6-20 "கோபத்தை விட்டுவிட்ட மனுஷன்" தமிழில் ஒரு விகடநாடகம்
6-30 ஸ்ரீ ஏ. கே. வி. ராஜா ஐயர் வாய்ப்பாட்டு

இரவு
7-30 மகாராஜபுரம் ஸ்ரீ விஸ்வநாத ஐயர் வாய்ப்பாட்டு
8-55 ப்ரொபசர் சாம்பமூர்த்தியின் ஆர்கெஸ்ட்ரா
9-30 "பிறருடைய அபிப்பிராயம்" என்ற விஷயம் பற்றி ஸ்ரீ என். ஸ்ரீராம் ஆங்கிலத்தில் பேசுவார்
9-45 ஐரோப்பிய சங்கீதம்

★

### வெள்ளி 30௳

மாலை
5-30 அ. இ. ரே. வாத்தியகோஷ்டி
5-40 ஸ்ரீ சத்யநாராயண வாய்ப்பாட்டு

இரவு
7-05 அ. இ. ரே. வாத்தியகோஷ்டி
7-15 "தமிழின் தனிப்பண்பு" என்ற விஷயம் பற்றி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் தமிழில் பேசுவார்
7-30 ஸ்ரீ முசிரி. சுப்ரமணிய ஐயர் வாய்ப்பாட்டு
9-00 அ. இ. ரே. வித்வான் வீணை
9-36 "முன் நோக்குதல்" என்ற விஷயம் பற்றி கனம் ஸ்ரீ எஸ். ராமநாதன் ஆங்கிலத்தில் பேசுவார்
9-45 ஸ்ரீ ரமணன் வாய்ப்பாட்டு

★

### சனி, அக்டோபர் 1௳

மாலை
5-30 "நான் பேசும் தமிழ்" என்பதுபற்றி ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி தமிழில் பேசுவார்
5-45 காயக சார்வபௌம ஜீ. பாருபல்லி ராமகிருஷ்ணய்யா வாய்ப்பாட்டு
7-30 திருவீழிமிழலை? — [see below]

7-30 ரேணூர் சகோதரர்கள் ஸ்ரீ கண்ணப்ப பிள்ளையும் ஸ்ரீ சின்னத்தம்பி பிள்ளையும் நாகசுரக் கச்சேரி
9-15 சென்னை நிலைய நிர்வாகஸ்தர் ஆங்கிலத்தில் பேசுவார்

★

### ஞாயிறு 2௳

மாலை
5-00 ஸ்ரீமதி கே. லலிதா வாய்ப்பாட்டு
5-30 மிஸஸ். பார்வதி கைலாசபதி வாய்ப்பாட்டு
6-05 ஸ்ரீமதி கே. லலிதா வாய்ப்பாட்டு
6-30 பாலையூர் ஸ்ரீ வெங்கடராம ஐயர் வாய்ப்பாட்டு

இரவு
7-15 "அபர்டீனைப்போல் ஒரு இடம் கிடையாது" (கதை)
7-30 முடிகொண்டான் ஸ்ரீ வெங்கடராமய்யர் வாய்ப்பாட்டு
9-15 "அக்டோபர் மாதம் உங்கள் தோட்டத்தில்" ஸ்ரீ பி. எஸ். நிரோடி
9-30 "விபீஷண சரணாகதி" என்ற கதையை ஸ்ரீ டி. பி. கல்யாணராம சாஸ்திரி நடத்துவார்

★

### திங்கள் 3௳

பள்ளிக்கூடங்களுக்கு கல்வி சம்பந்தமாக ஒலிபரப்பு நிகழ்ச்சிகள்

பகல்
2-00 ஆரம்பதினப் பிரசங்கம்: சென்னை கல்வி இலாகா மந்திரி கனம் டாக்டர் பி. சுப்பராயன் ஆங்கிலத்தில் பேசுவார்
2-05 மனிதன் உபயோகத்திலிருக்கும் விஞ்ஞானம்: "ரேடியோ" டாக்டர் வ. வீரபத்ர ராவ்
2-20 சங்கீதம்

மாலை
5-00 "கட்டை வண்டி" தமிழில் ஒரு சங்கீத நாடகம் (அ. இ. ரே. நடிகர்கள்)
5-55 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி
6-00 ஸ்ரீமதி லக்ஷ்மிரத்னம்மாள் வாய்ப்பாட்டு

இரவு
7-15 "நாட்டுக் கூட்டுறவு" ஸ்ரீ பி. என். மார்த்தாண்டம் பிள்ளை தமிழில் பேசுவார்
7-30 ஸ்ரீ ஜி. என். பாலசுப்ரமண்யம் வாய்ப்பாட்டு
9-15 'பரிசயம் இல்லாதவர்களுக்கு கர்நாடக சங்கீதம்' பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி
9-30 ஐரோப்பிய சங்கீதம்

★

### செவ்வாய் 4௳

மாலை
4-முதல் 4-30 வரை குழந்தைகளுக்கு
5-00 ஸ்ரீமதி எ. பட்டம்மாள் வாய்ப்பாட்டு
5-30 அ. இ. ரே. வித்வான் பிடில்
5-35 ஸ்ரீ எம். எஸ். ஹரிகர ஐயர் வாய்ப்பாட்டு
6-00 குழந்தைகளுக்குரிய புரோகிராம்

தியாகராயநகர் பெண்பாடசாலை மாணவிகள்

'குழந்தைகள் செய்யக்கூடாதவைகள்' என்பதுபற்றி ஸ்ரீ அகேலாவும் சில புதிய விளையாட்டுகள் என்பது பற்றி ஸ்ரீ டி. எஸ். வாஸுதேவனும் தமிழில் பேசுவார்கள்.
'கொக்கும் நண்டும்" என்ற சாகித்யக் கதையை ஸ்ரீ. ஜயராவ் பாடிக் காட்டுவார்

7-30 ஸ்ரீ வெங்கடசுப்பைய குப்தா வாய்ப்பாட்டு
9-15 "தேசீயம்" ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி ஆங்கிலத்தில் பேசுவார்

★

### புதன் 5௳

பள்ளிக்கூடங்களுக்கு ஒலிபரப்பு நிகழ்ச்சிகள்

மாலை
2-00 "இது உங்களுக்கு ரஸமா யிருக்கலாம்"
2-05 "நாம் வசிக்கும் வீடு" ஒரு உடலியல் நிபுணர்.
2-20 சங்கீதம்

குழந்தைகளுக்கு

மாலை
4-00 ரஸமான விஷயங்கள் (தமிழ்) "ரேடியோ மாமா"
4-05 "சாரணர் செய்யும் தொண்டு" ஸ்ரீ. கே. ஜே. நடராஜ மூர்த்தி தமிழில் பேசுவார்.
4-20 சங்கீதம் தமிழ் பாட்டுக்கள் ஸ்ரீ. எம். சுந்தரேஸ்வரன்
5-00 ஸ்ரீ. சேதுராமய்யா, ஸ்ரீ. வெங்கடராம சாஸ்திரி பிடில்
5-20 ஸ்ரீ. ஜி. என். பஞ்சநாதன் வாய்ப்பாட்டு

இரவு
6-15 ஸ்ரீரங்கம் ஸ்ரீ. எஸ். எம். ராமசாமி ஐயங்கார் வீணை
7-15 பேசும் படத்தைப்பற்றி பேச்சு "டாக்கியில் மதம்" ஸ்ரீ எம். டி. ராஜன் தமிழில் பேசுவார்
7-30 ஜி. ஸ்ரீ. என். பஞ்சநாதன் வாய்ப்பாட்டு

★

### வியாழன் 6௳

மாலை
4-முதல் 4-30 வரை குழந்தைகளுக்கு
5-00 ஸ்ரீ. எஸ். நாகராஜன் வாய்ப்பாட்டு
6-00 ஆடவர்கள் கேட்கவேண்டாம் (பெண்களுக்கு மட்டும் பிரத்தியேக புரோகிராம்) முத்திரை மெட்டு

பெண்களின் வர்த்தமானமும் அபிப்பிராயங்களும் (தமிழ்). ஒரு சாகித்யம் ஸ்ரீமதி கோதைநாயகி அம்மாள். அடுப்பங்கரையில்: இரண்டு ருசிகரமான காரபட்சணங்கள் ஸ்ரீமதி பத்மாசனி தமிழில் பேசுவார். "கோலம் போடுவது" ஸ்ரீமதி சாந்தி தமிழில் பேசுவார். தற்கால நாகரீக உடைகள் (ரவிக்கைகள்) ஸ்ரீமதி ராஜம் தமிழில் பேசுவார்.

6-30 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி
6-45 ஸ்ரீ. எஸ். நாகராஜன் வாய்ப்பாட்டு

[குறிப்பு. ஸெப்டம்பர் 29,30 தேதிகளில் இரவு 9-15க்கும், இதர நாட்களில் இரவு 9-க்கும் வர்த்தமானமும், வானிலை அறிக்கையும். தினமும் இரவு 10-30க்கு நிகழ்ச்சிகள் முடிவடையும்.]

## ரயில் வண்டிப் போக்கு வரவு

### காரைக்குடியிலிருந்து திருச்சிக்கு

| வண்டிகள் விபரம். | வரும் நேரம் | புறப்படும் நேரம் |
|---|---|---|
| நிர். 32. பாசஞ்சர். | .... | 6–55 |
| நிர். 68. ,, ... | 10–11 | 10–21 |
| நிர். 30. ,, ... | 13–57 | 14–7 |
| நிர். 2. இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் | 16–15 | 16-25 |
| நிர். 34. பாசஞ்சர் | 18–30 | ... |
| நிர். 26. பாசஞ்சர் | 20–13 | 20–25 |
| நிர். 8. தனுஷ்கோடி பாஸ்ட் பாசஞ்சர் | 1–15 | 1–25 |

### காரைக்குடியிலிருந்து மானுமதுரைக்கு

| வண்டிகளின் விபரம். | வரும் நேரம் | புறப்படும் நேரம் |
|---|---|---|
| நிர். 25. பாசஞ்சர் | 6–22 | 6–28 |
| நிர். 1. இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் | 10–5 | 10–13 |
| நிர். 67. பாசஞ்சர் | 12–55 | ... |
| நிர். 33. ,, ... | ... | 14–25 |
| நிர். 29. ,, ... | 15–56 | 16–17 |
| நிர். 31. பாசஞ்சர் | 19–58 | 20–22 |
| நிர். 7. தனுஷ்கோடி பாஸ்ட் பாசஞ்சர் | 0–10 | 0–18 |

33 நிர். பாசஞ்சரும், 29 நிர் பாசஞ்சரும் நேராக மதுரை ஜங்ஷனுக்குப் போகின்றன.

### "தேவகோட்டை ரோடு"

காரைக்குடிக்கடுத்து தேவகோட்டை ரோட்டிலுள்ள ஷ்டேஷனில் இருந்து

### மானுமதுரைக்கு

| வண்டிகள் விபரம். | புறப்படும் நேரம். |
|---|---|
| நிர். 25 பாசஞ்சர் | 6–38 |
| நிர். 1. இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் | 10–22 |
| நிர். 33 ,, ... | 14–33 |
| நிர். 29 ,, ... | 16–26 |
| நிர். 31 ,, ... | 20–30 |

### திருச்சிக்கு

| வண்டிகள் விபரம். | புறப்படும் நேரம். |
|---|---|
| நிர். 68 பாசஞ்சர் | 10—0 |
| நிர். 30 ,, ... | 13–50 |
| நிர். 2 இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் ... | 16—7 |
| நிர். 34 ,, ... | 18–19 |
| நிர். 26 ,, ... | 20—6 |
| நிர். 8 ,, ... | ... |



## அஹிம்ஸையின் பலம்

### மகாத்மா விளக்கம்.

காங்கிரஸ் காரியக்கமிட்டி மெம்பர்களும், காங்கிரஸ் பிரதம மந்திரிகளும், செப்டம்பர் 23௳ ஹரிஜன காலனிக்குச் சென்று மகாத்மா காந்தியை சந்தித்து அஹிம்ஸா படையைப்பற்றி விவாதித்தனர்.

மகாத்மா தனது மௌன விரதத்தை முடித்துக்கொண்டு, தன்னுடைய அஹிம்ஸா படை திட்டத்தின் அம்சங்களை தலைவர்களுக்கு எடுத்துச் சொன்னார். சத்யம், அஹிம்ஸை என்பதைப்பற்றி மகாத்மா காந்தி சுமார் ஒரு மணிநேரம் பேசினார். எந்த நிலைமையிலும், காங்கிரஸ் இவ்விரண்டையும் விடக் கூடாதென்று வற்புறுத்தினார்.

"காங்கிரஸ் ஜீவித்திருக்க வேண்டுமானால், காங்கிரஸ் மேன்மேலும் வளர்ச்சியடைய வேண்டுமானால், காங்கிரசின் பரிசுத்தத் தன்மை பாதுகாக்கப்பட வேண்டியது அத்தியாவசியம். காங்கிரசின் கொள்கைகளான சத்யத்திலும், அஹிம்ஸையிலும் காங்கிரஸ்காரர்களுக்கு உண்மையான நம்பிக்கை இருந்தால், கடைசி வரையில் அதை நிறைவேற்றி வைக்க உடனே நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். அரசியல் சுதந்தரம் பெறுவதற்கு மட்டும் தானா, சத்யமும், அஹிம்ஸையும்? நாட்டை ஆளுவதற்கும், கிடைத்த சுதந்தரத்தை வைத்துக் காப்பாற்றுவதற்கும், சத்யம், அஹிம்ஸை வேண்டாமா? காங்கிரஸ் அப்படியிருக்கு மென்று என்னால் நினைக்க முடியவில்லை.

"என் சம்பந்தப்பட்ட வரையில், மனித வர்க்கத்தின் எல்லா கஷ்டங்களுக்கும் கைகண்ட சஞ்சீவி, சத்யமும், அஹிம்ஸையும் தான்.

"அஹிம்ஸையின் மூலம் எதையும் சாதிக்கமுடியு மென்று நான் திடமாக நம்புகிறேன். ஒரு தேசத்திற்கு சுதந்தரம் பெறுவதற்கோ அல்லது ஒரு தேசத்தின் சுதந்தரத்தைக் காப்பாற்றுவதற்கோ யுத்தத்திற்குப் போவதென்றால் பலாத்காரத்தில் இறங்கித் தானாகவேண்டும். அஹிம்ஸாவாதியான எனக்கு யுத்தத்தில் நம்பிக்கை கிடையாது. பெரிய பெரிய சைன்யங்களை விட அஹிம்ஸை அதிக பலம் பொருந்திய ஆயுதம் என்பதில் எனக்கு சந்தேகமில்லை. எந்த சைன்யத்தையும், என்னுடைய இந்த இரண்டு ஆயுதங்களையும் கொண்டே சமாளிப்பேன்.

"காங்கிரஸ் ஸ்தாபனத்தைப் பரிசுத்தமானதாகவும், பலம் பொருந்தியதாகவும் வைத்திருக்கவேண்டுமானால் சத்தியத்தையும், அஹிம்ஸையையும் கண்டிப்பாக அனுஷ்டிக்கவேண்டும். அதற்குக் காங்கிரஸ் அமைப்பில் சில மாறுதல்கள் செய்யவேண்டும்.

"இதை நான் சொல்லுகிறேனென்பதற்காக நீங்கள் அப்படியே ஒப்புக்கொண்டு விட வேண்டாம். நீங்களும் நன்றாக யோஜித்துப் பாருங்கள். நான் சொல்லுவது சரியென்று தோன்றினால் ஒப்புக்கொள்ளுங்கள்" என்று காந்திஜி கூறினார்.



## மகாத்மா வாழ்க.

**1925-ல் மகாத்மாவின் 58-வது பிறந்த நாள் விழாவன்று சோ. முரு. அவர்களால் பாடப்பெற்றன.**

பொய்யெலா மகன்று வையம் புண்ணியப் பொருளே யாகத்
துய்யதோ ரிராட்டினத்தின் சுழற்சியின் பெருமை மல்கக்
கையிலா வேழை மாந்தர் கவலையி னீங்கி யென்றும்
உய்யவே யுலகந் தன்னில் உதித்தது காந்தித் தெய்வம். (1)

சாந்தமே யுருவாய் நின்று தண்ணளி பரப்பி நாளும்
மாந்தர்தந் துயரந்தீர வந்துமே யுலகந் தன்னிற்
சார்ந்தநல் லறிவும் பேறுந் தந்தினி தருளுகின்ற
காந்தியெம் பெருமான் பாதங் கருத்தினிற் கொண்டு வாழ்வாம். (2)

கதராடை புனைகவென்றார் கைந்நூலை
நூற்கவென்றார் கருத்திற்கொண்டு
பதறாத வுண்மைநெறி பற்றுகவென்
றெடுத்துரைத்தார் பாவச் சேர்க்கை
மதுவாகு மெனத்தெளிவா வகுத்திட்டார்
தீண்டாமை வாட்டச் சொன்னார்
இதமான வாழ்க்கைதனக் கிந்நாமக
மதியருற வினிதென் றாரே. (3)

இன்னவகைத் தூயநெறி தனைவகுத்த
காந்திபிரான் இணைத்தாள் போற்றி
சொன்னவிந்த வழிச்செல்லுந் தூயமனப்
பெரியோர்தந் துணைத்தாள் போற்றி
தன்னலமொன் றறியாத கஸ்தூரித்
தாயிரு தாள்கள் போற்றி
நன்னயமா வெனையாண்ட பாரதத்தா
யிருபாத நளினம் போற்றி. (4)

காலையிலே யெழுந்திருந்து நீராடிக்
கதராடை இடைபுனைந்து கைநூல் நூற்றுச்
சோலையிலே வாழுகின்ற கிளியன்னாரைத்
துணையாகக் கொண்டதிதி பூசைசெய்து
ஆலைதனிற் கிடந்தலையுங் கரும்பைப் போல
அன்னியநா டணுகியநம் மாசை மக்கள்
காலநினைந் துருகிநிற்பார் நெஞ்சினுள்ளே
காந்தியடி யிணைமலரைக் காணலாமே. (5)

காலனையே யெதிர்நோக்கு முழவன் றானுங்
கஞ்சிக்கு வழியிலனாய்க் கலப்பை தூக்கி
வேலையிலே மனங்கொண்டு பழனஞ் சென்று
விழவுழவு செய்திட்டவ் வுடனு மோய்ந்து
மாலையிலே குழந்தையெலாம் வயிறு மெய்யும்
வரண்டுருகி வழிபார்க்கக் குடிசை நண்ணுங்
காலையிலே கண்டுருகி நைவார் நெஞ்சிற்
காந்தியடி யிணைமலரைக் காணலாமே. (6)

ஆற்றல் நிறைந்தவெம் அம்மான் கண்டாய்
அன்புசால் நெறிகண்டாய் அண்ணல் கண்டாய்
போற்று கதராடைப் புனிதன் கண்டாய்
பொறுமையின் றிறங்கண்டாய் புவியோரெல்லாம்
ஏற்று புகழ்கொண்ட எம்மான் கண்டாய்
இந்தியர்தம் வாழ்விற்கா வெழுந்தான் கண்டாய்
சாற்று புகழார்போர்ப் பந்தர் மேவும்
தண்ணளியார் காந்தியெனுந் தலைவன்றானே. (7)

துரிசற்ற மக்கட்குத் தோழன் கண்டாய்
தூய்மைசால் நெறிகண்டாய் துறவிகண்டாய்
பரிசுத்த வாழ்வில்லம் பரிப்பான் கண்டாய்
பாருற்ற வெளியாரி னடியான் கண்டாய்
தெரியாத வுயிர்களிடங் கருணை காட்டிச்
சிறைபுகுந்து வாழ்வளித்த செல்வன் கண்டாய்
சரியான வழியிதென்று நடந்து காட்டும்
தண்ணளியார் காந்தியெனுந் தலைவன்றானே. (8)



## காங்கிரசில் ஒழுங்கீனம்

### மகாத்மா 'ஹரிஜன்' கட்டுரை

சென்றவார 'ஹரிஜன்' பத்திரிகையில், மகாத்மா காந்தி பின் வருமாறு எழுதியிருக்கிறார்:—

"காங்கிரஸ் ஸ்தாபனத்தில் ஒழுங்கீனம், அசத்யம், பலாத்காரம் இருப்பதாக புகார் செய்து பல இடங்களிலிருந்து எனக்கு வரும் கடிதங்களை சமாளிப்பது கஷ்டமாயிருக்கிறது. காங்கிரஸ் காரர்களுடைய பலஹீனங்களைப்பற்றி சில குறிப்பிட்ட கடிதங்களை நான் பிரசுரித்துக்கொண்டுதானிருப்பேன்.

"ஆனால், இதன்மூலம், காங்கிரஸ் பூராவுமே மோசமாய்விட்டதோ என்று அவசரப்பட்டு முடிவுகட்டிவிடக் கூடாதென்றும், எச்சரிக்க விரும்புகிறேன். அப்படிப் போகவில்லை என்பதை நானறிவேன். ஆனால், அந்த பெரிய ஸ்தாபனம் க்ஷீணமடையாமல் பாதுகாக்கப்பட வேண்டுமானால் தீவிரமான நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டுமென்ற அளவுக்கு அசத்யம், பலாத்காரம், ஒழுங்கீனம் முதலியவைகள் காங்கிரஸுக்குள் நுழைந்து விட்டனவென்பது உண்மையே. எனக்கு வந்திருக்கும் இரண்டு கடிதங்களிலிருந்து சில பாகங்கள் தருகிறேன்:—

(1) போலி காங்கிரஸ் மெம்பர்கள் சேர்ப்பது எப்படி நடந்துகொண்டிருக்கிறதென்பது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். பணக்காரர்களும், கொள்கை இல்லாதவர்களும் காங்கிரஸ் விவகாரங்களை நிர்வகித்து வருகிறார்கள். இவர்கள் உண்மையான ஊழியர்களைப் பின்னால் தள்ளி விடுகிறார்கள். சிலர் தங்கள் சொல்படி கேட்பவர்களின் நாலணா சந்தாப் பணத்தை தாங்களே கொடுத்து விடுகிறார்கள். சிலர் காங்கிரஸ் ஸ்தாபனத்திற்கு ஒரு பைசாகூட கொடுக்காமல், பொய்க்கணக்கு தயாரித்து விடுகிறார்கள். 25 மெம்பர்களுக்கு குறைவாக உள்ள பிரைமரி கமிட்டி, மேல் கமிட்டிக்கு மெம்பர்சந்தா கொடுக்கவேண்டியதில்லையென்று விதி இயற்றிக்கொண்டிருக்கிறார்கள். இதன் பலனாக, 25 மெம்பர்களுக்குக்குறைவான பல பிரைமரி கமிட்டிகள் ஏற்படுத்தப்படுகின்றன.

(2) காங்கிரஸ் மெம்பர்கள் சேர்ப்பதிலுள்ள கேவலமான ஒழுங்கீனத்தை உங்கள் கவனத்திற்கு கொண்டுவரவேண்டியது அவசியம். இங்குள்ள காங்கிரஸ் நிர்வாகிகளுக்கு இந்த விஷயமெல்லாம் நன்கு தெரியும். ஆனால், அவர்கள் ஏன் ஒன்றும் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவில்லையென்று தெரியவில்லை. ஒன்றும் செய்யாமலிருந்தால், நிலைமை வரவர கேவலமாய்க் கொண்டுபோகும். காங்கிரஸின் பெயருக்கே ஹானி வந்து, ஜனங்களிடம் அதற்கிருக்கும் செல்வாக்கும் போய்விடும். காங்கிரஸ் உத்தியோகங்களைக் கைப்பற்றுவதற்காக எல்லோரும் போலி மெம்பர்கள் சேர்க்க ஆரம்பித்துவிட்டார்கள்.

"இந்த ஒழுங்கீனங்களையெல்லாம் எப்படி நிறுத்துவதென்று எனக்குத் தெரியவில்லை. டில்லியில் அ. இ. கா. கமிட்டி கூடும்போது, விதிகள் மாற்றப்படுமென்று நம்புகிறேன். இந்த ஒழுங்கீனங்களை நிறுத்த உடனே ஏதாவது நடவடிக்கை எடுத்துக்கொண்டாகவேண்டும்.

"மேற்கூறியவைகளெல்லாம், பொறுப்பு வாய்ந்தவர்களால் செய்யப்படும் புகார்கள். பிரசுரத்திற்காகவே இக் கடிதங்கள் அனுப்பப்பட்டன. ஆனால் கடிதம் எழுதியவர்களின் பெயர்களையும், மாகாணத்தையும் நான் வேண்டுமென்றே பிரசுரிக்காமலிருக்கிறேன்.

"இதையெல்லாம்பற்றி காரியக் கமிட்டியும் அ. இ. கா. கமிட்டியும் விவாதிக்குமென்று நம்புகிறேன். பிரசங்கவன்மையிலோ, பரஸ்பரம் சண்டைகளிலோ அ. இ. கா. கமிட்டி கூட்டத்தை முடித்து விடுவது பெரிய விபத்தாயிருக்கும்."

திருவிதாங்கூரில் அடக்குமுறை நாளுக்கு நாள் அதிகரிக்க, அதிகரிக்க காங்கிரஸ்காரர்களின் கிளர்ச்சியும் வலுப்பெற்றே வருகிறது.

### பள்ளிகளில் மறியல்

பள்ளிக்கூடங்களில் மாணவர்கள் மறியல் செய்துவருகின்றனர். இதனால் பல ஊர்களில் பள்ளிக்கூடங்களுக்கு மாணவர்கள் செல்லவில்லை. திருவனந்தபுரம் ஆர்ட்ஸ் காலேஜில் 21உ மாணவர்கள் பெருத்த ஆர்ப்பாட்டஞ் செய்தனர். ஜன்னல் கண்ணாடிகள் உடைக்கப்பட்டன. மாணவர்கள் தலைவனை சஸ்பெண்டு செய்தும் நிலைமை அமைதிப்படாததால், பிற்பகலில் கல்லூரியை மூடினர்.

### மகாத்மா செய்தி

திருவனந்தபுரம் சட்டக்கல்லூரி மாணவர்கள் தமக்கு அனுப்பியுள்ள தந்திக்கு மகாத்மா விடுத்துள்ள பதிலில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

"மகத்தான தியாகங்கள் புரிந்தால்தான் விடுதலைகிட்டும்; மனோ, வாக்கு காயம் மூன்றிலும் நீங்கள் அஹிம்சையை அனுஷ்டிக்கிறீர்கள். அப்படிச் செய்தால் கடைசி வரையில் தியாகம் புரியுங்கள், நீங்கள் விடுதலை பெறுவது நிச்சயம்."

### ஸ்ரீ. குமரப்பா அறிக்கை

அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கக் காரியதரிசி ஸ்ரீ ஜே. ஸி. குமரப்பா பத்திரிகைகளுக்கு விடுத்துள்ள செய்தியில் தாம் 10 தினங்கள்வரை திருவிதாங்கூரில் சுற்றுப்பிரயாணம் செய்து பெற்ற அனுபவத்தைக் குறிப்பிட்டிருக்கிறார். நாடுமுழுவதும் ஒரே கலக்கம் ஏற்பட்டிருக்கிறதென்றும், ஜனங்களிடையே அற்புதமான ராஜீய விழிப்பு ஏற்பட்டு எல்லா வகுப்பினரும் ஒன்றுபட்டிருக்கின்றனரென்றும், அடக்குமுறையைத்தவிர வேறொன்றையும் காணவில்லையென்றும், ஜனங்கள் மிகுந்த ராஜபக்தியுடனேயே இருக்கிறார்களென்றும் அந்த அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

### ஸ்ரீமதி கமலாதேவி பிரசங்கம்

ஸெப்டம்பர் 20உ மாலை சென்னை காங்கிரஸ் மாளிகையில் சமஸ்தானங்களில் அடக்குமுறை பற்றி ஸ்ரீமதி கமலாதேவி நிகழ்த்திய பிரசங்கத்தில், சமஸ்தானங்களில் ஏற்பட்டிருக்கும் அடக்குமுறையாட்சி, உலகம் முழுவதிலும் தினமும் நிகழ்ந்துவரும் கொடுமையின் பிரதிபிம்பந்தானென்றும் இந்தப் போர் உண்மையில் யதேச்சாதிகாரத்துக்கும் ஜன நாயகத்துக்கும் நடக்கும் போர்தானென்றும், சமஸ்தான விவகாரங்களில் தலையிடாது விலகியிருப்பது காங்கிரஸுக்கு கேடு விளைவிக்குமென்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

### காங்கிரஸ் வாதிகளுக்குத் தண்டனை

கங்காதர மேனன், கிருஷ்ணபிள்ளை என்ற இரண்டு காங்கிரஸ் வாதிகளுக்கு புதிய அடக்குமுறைச் சட்டப்படி தலா 15 மாத வெறுங்காவலும் ஆயிரம் ரூபா அபராதமும் விதிக்கப்பட்டன. நாகர்கோவில் ஸ்ரீ எ. சங்கரப்பிள்ளைக்கு 18 மாத வெறுங்காவலும் 1500 ரூ. அபராதமும் விதிக்கப்பட்டன.

### 'ஜயபாரதி' க்குத் தடை

கொச்சியிலிருந்து பிரசுரமாகும் 'ஜயபாரதி' யெனும் பத்திரிகை திருவாங்கூர் எல்லைக்குள் வரக்கூடாதென்று சர்க்கார் தடுத்திருக்கின்றனர்.

### துப்பாக்கிப் பிரயோகம்

ஸெப்டம்பர் 21உ திருவனந்தபுரம் கடற்கரையில், காங்கிரஸின் ஆதரவில் கூடிய பெருங்கூட்டத்தின்மீது துருப்புகள் துப்பாக்கிப் பிரயோகம் செய்தன.



# திருவிதாங்கூரில் அடக்குமுறை

## மாணவர்களுக்கு மகாத்மா செய்தி

## ஸ்ரீமதி குருவில்லா ஐந்தாம் தலைவர்

கூட்டத்தைக் குதிரைப் படையினர் கலைக்க முயன்றபோது அவர்கள் மீது கல் லெறியப்பட்டதாலேயே துப்பாக்கிப் பிரயோகம் செய்ததாக கவர்ன்மெண்டு அறிக்கை கூறுகிறது. இருவர் மாண்டனர். அதே தினத்தில் ஆற்றங்கல் எனுமிடத்தில் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகத்தால ஐவர் காயமுற்றனர். ஆலப்புழையில் பொதுக் கூட்டத்தை நோக்கி போலீஸார் சுட்டதால் ஒருவர் காயமுற்றார். ஜனங்கள் போலீஸார் மீது கற்களை எறிந்ததால் போலீஸாரில் சிலருக்குக் காயமேற்பட்டதாயுந் தெரிகிறது.

### நான்காவது தலைவர் கைது

சமஸ்தானக் காங்கிரஸின் நான்காவது தலைவர் ஸ்ரீ எ. ஜே. ஜானும், இன்னும் 13 பேர்களும் திருவனந்தபுரத்தில் கைது செய்யப்பட்டனர். சில தஸ்தவேஜிகளும் கைப்பற்றப்பட்டன.

### காந்தி ஜயந்திக்குத் தடை

காந்தி ஜயந்தி சம்பந்தமாக எத்தகைய கூட்டங்களும் ஊர்வலங்களும் நடத்தக் கூடாதென்று கோட்டயம் மாஜிஸ்திரேட் தடையுத்தரவு பிறப்பித்திருக்கிறார்.

### ஸ்திரீ தலைவர் நியமனம்

மிஸஸ் ஜான் குருவில்லா சமஸ்தான காங்கிரஸின் ஐந்தாவது தலைவராக நியமிக்கப்பட்டிருக்கிறார். அவர் வெளியிட்டிருக்கும் அறிக்கையில், சர்க்கார் இணங்கி வரும்வரையிலும் போராட்டத்தை நடத்தியே தீருவோம் என்று குறிப்பிட்டிருக்கிறார்.

### மாணவர் நீக்கம்

திருவனந்தபுரம் ஆர்ட்ஸ் காலேஜில் 21உ நடைபெற்ற கலவரம் சம்பந்தமாக இரு மாணவர்கள் கல்லூரியிலிருந்து நீக்கப்பட்டனர். ஒருவர் ஒரு வருஷத்திற்கு சஸ்பெண்டு செய்யப்பட்டார். நால்வர் மறு உத்தரவு வரையில் சஸ்பெண்டு செய்யப்பட்டிருக்கின்றனர்.

### மாணவர்கட்கு அடி

பாலாய் ஸெண்ட் தாமஸ் ஹைஸ்கூலைச் சேர்ந்த 21 மாணவர்கள் 23உ பள்ளிக்கூடத்திற்கு முன்பு மறியல் செய்தனர். கலைந்துபோகும்படி போலீஸார் உத்தரவிட்டும், கலையாததால், போலீஸார் அவர்களை பிரம்பாலடித்தனர். அதற்கும் அவர்கள் கலையாததால், போலீஸார் அத்தனை மாணவர்களையும் கைது செய்தனர். மறுநாள் நகரத்தில் பூரண ஹர்த்தால் அனுஷ்டிக்கப்பட்டது.

### சிறையில் அடி

ஆற்றங்கல் பொதுக் கூட்டத்தில் கைதுசெய்யப்பட்ட டாக்டர் என். என். பிள்ளை காவலில் வைக்கப்பட்டிருக்கையில், போலீஸார் அவரைப் பலமாகத் தாக்கினராம். அவர் ஜெனரல் ஆஸ்பத்திரியில் சிகிச்சைபெற்று வருகிறார்.

### பலர் கைது

மத்திய திருவாங்கூர் காங்கிரஸ் கமிட்டி தலைவர் ஸ்ரீ கோபால்பணிக்கரும் காரியதரிசி ஸ்ரீ கே. ஸி. தாமஸும் 22உ கொல்லத்தில் கைது செய்யப்பட்டனர். இதை முன்னிட்டு அங்கு ஹர்த்தால் நடைபெற்றது. புளிங் குன்னத்தில் 8 காங்கிரஸ் ஊழியர்கள் கைதியாயினர். காயங்குளத்தில் அறுவர் கைதியாயினர். பறவூரில் இரண்டு அட்வகேட்டுகள் 23உ கைதியாயினர்.

### சென்னையில் பொதுக்கூட்டம்

சென்ற சனிக்கிழமை, சென்னையில் டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் டாக்டர் ஜே. ஸி. குமரப்பா திருவிதாங்கூர் நிலைமையை விளக்கிப் பேசினார். திருவிதாங்கூர் நிலைமையைப்பற்றி விசாரிக்க பாரபட்சமற்ற ஒரு கமிட்டியை நியமிக்கும்படி இந்திய சர்க்காரையும், திருவிதாங்கூர் சர்க்காரையும் கேட்டுக்கொள்வதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. திருவிதாங்கூர் சர்க்கார் அடக்குமுறையைக் கண்டித்து மாகாணத்தின் பலவிடங்களிலுமுள்ள பொது ஸ்தாபனங்கள் கண்டனத் தீர்மானங்கள் நிறைவேற்றியிருக்கின்றன.

காயங்குளத்தில் 25உ மூவாயிரம் பேரடங்கிய பொதுக்கூட்டமொன்று நடைபெற்றது. தடையுத்தரவை மீறிப்பேசிய காங்கிரஸ் தொண்டர்கள் யாரும் கைது செய்யப்படவில்லை.

### மலையாள ஜதாவுக்கு விடுதலை?

மலையாளத்திலிருந்து திருவிதாங்கூர் காங்கிரஸ் நடவடிக்கைகளில் கலந்துகொள்ளவந்து கைது செய்யப்பட்ட மலையாள ஜதாவைச் சேர்ந்தவர்களை, சமஸ்தானத்தைவிட்டு உடனே வெளியே செல்வதாக வாக்குறுதி யளித்தால் விடுவித்து விடும்படி சர்க்கார் உத்தரவிட்டிருக்கின்றனர்.

### அபேதவாதிகளுக்கு தண்டனை

கேரள காங்கிரஸ் அபேதவாதக் கட்சியைச்சேர்ந்த ஸ்ரீ சேகருக்கும் இன்னொருவருக்கும் 18 மாதக் கடுங்காவலும் 1000 ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டன.

### போலீஸ் படையில் செம்படவர்கள்

திருவனந்தபுரம் கடற்கரையில் நிகழ்ந்த சம்பவத்திற்குப்பிறகு, அங்குள்ள செம்படவர்களுக்கு அரசாங்கத்தார் கொஞ்சம் சலுகைகாட்ட ஆரம்பித்திருப்பதாகத் தெரிகிறது. கவர்ன்மெண்டு மீன் இலாகா சிப்பந்திகளை நகருக்குள் இனி மீன்விற்க வேண்டாமென்று தடுத்திருக்கிறார்கள். மீன் சந்தையில், வரி வசூலிக்கும் விஷயத்திலும் செம்படவர்களுக்கு சௌகரியமளிக்கும்படி உத்தர விடப்பட்டிருக்கிறது. போலீஸ் இலாகாவில் செம்படவர்களைச் சேர்த்துக்கொள்ளுமாறும் உத்தரவிடுகிறார்கள்.

### செங்கன்னூரில் கைது

26உ காங்கிரஸ் தலைவர்கள் மூவர் கைதியாயினர். அன்றையதினம் நகர் முழுவதும் ஹர்த்தால் நடைபெற்றது. கோழஞ்சேரியில் 11 பேர் கைதியாயினர். செங்கன்னூரிலுள்ள பள்ளிக்கூடங்கள் அனைத்திலும் மாணவர்கள் பூரண வேலைநிறுத்தம் ஆரம்பித்துள்ளனர்.

### மாணவர் விடுதலை

பாலாய் பள்ளிக்கூடத்தின் முன்பு சத்தியாக்கிரகம் செய்ததற்காகக் கைதுசெய்யப்பட்ட 22 மாணவர்களும் மஹாராஜா அவர்களின் உத்தரவுப்படி எவ்வித நிபந்தனையுமின்றி விடுதலை செய்யப்பட்டனர்.









# ராஜா ராம்மோகனர் விழா.

## பெண்களுக்கு உயிர்கொடுத்த உத்தமன்

(நமது நிருபர்)

ராஜா ராம்மோகனராயின் 166-வது ஆண்டுவிழா காரைக்குடி மாதர் மறுமண சகாய சங்கத்தின் சார்பில் செப்டம்பர் 27உ கொண்டாடப்பட்டது. மாலை 6-மணிக்கு செக்காலையிலுள்ள சொக்கலிங்கம் சுகாதார நிலையத்தில் விழா ஆரம்பமாயிற்று. ராம் மோகனரின் உருவப்படம் புஷ்ப அலங்காரத்துடன் அங்கே வைக்கப்பட்டிருந்தது. காரைக்குடி முனிசிபல் கமிஷனர் திரு. எஸ். ராமதாஸ் நாயுடு அவர்கள் தலைமை வகித்தார்கள். முன்னுரையில், ராம் மோகனரைப்பற்றி சுமார் 30 ஆண்டுகட்கு முன்பு பள்ளிக்கூட பாடப்புத்தகத்தில் படித்திருப்பதாகவும், அவரை நினைத்து நடக்கும் விழாவென்றதும் ஒப்புக்கொண்டதாகவும் அவர் அரசியல் சமூக சீர்திருத்தம் ஆகிய விஷயங்களில் ஈடுபட்டதோடல்லாமல் கடவுள் பக்தியிலும் தலைசிறந்த மகான் என்றும் குறிப்பிட்டார்கள்.

### ஸ்ரீமான். ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார்

ராம் மோகனர் தெய்வத்தன்மை வாய்ந்தவர். பெண்கட்கு உயிரைக் கொடுத்தார். புருஷனிழந்த பெண் மக்களை உயிருடன் நெருப்பில் போட்டுக் கொன்றார்கள். அப்படிக் கொல்வதைத் தடுத்துப் பெண் குலத்துக்கே உயிர் கொடுத்தவர். தெய்வமென்று அவரைச் சொல்வதில் தடையில்லை. உடலையும் பொருளையும் மக்கள் தொண்டுக்கு ஈடுபடுத்தினவர். கடவுள் பக்தி நிறைந்த அவருக்கு விக்ர ஆராதனையில் நம்பிக்கையில்லை. அதை வெறுத்தார். தமிழ் நாட்டில் முத்துலட்சுமி ரெட்டி சமூக சீர்திருத்த வேலையில் ஈடுபட்டுழைக்கிறார். முருகப்பாவும் மரகதவல்லியாரும் இப்பகுதியில் மிகுந்த வேலை செய்கிறார்கள். சமீபத்தில் சுவாமி சுத்தானந்தபாரதியார் ஒரு கட்டுரையில் இவர்களின் தொண்டைப் பற்றிப் பாராட்டிக் கூறியிருக்கிறார்கள். இவர்கள் செய்யும் இத்தொண்டில் சமயம் வாய்க்கும்போதெல்லாம் சேர்ந்து உழைத்து வருகிறேன். எனக்கு இவ்வியக்கத்தில் மிகுந்த பிரியம். இத்தொண்டு நன்கு பரவவேண்டுமென்றும் பலருடைய ஆதரவைப்பெற வேண்டுமென்றும் விரும்புகிறேன்.

### ஸ்ரீமான் சா. கணேசன்.

இந்த வாரம் சிறந்தது. காந்தி பிறந்தது; தீண்டாமை விலக ஒப்பந்தம் பிறந்தது; வணக்கத்துக்குரிய ராம்மோகனர் தினமும் இந்தவாரமே வருகிறது. மனித உருவம் படைத்தவர் யாவரும் மனிதனாகிவிடமுடியாது. மனித உள்ளம் வேண்டும். மிருக உள்ளம் அதிகப்பட்டிருப்பதால்தான் உலகில் யுத்தமும் கொலையும் துன்பமும் உண்டாகின்றன. சிலர்தான் மனிதர்கள். அவர்களுள் ராம்மோகனரும் ஒருவர். அதனால்தான் அவரைப்பற்றிப் பேசிப் பயனடைகிறோம். 'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்றார் வள்ளுவர். ராம் மோகனர் நன்மை செய்வதிலேயே மூழ்கியிருந்தார். ஆங்கிலங் கற்று மேல்நாட்டு அரைகுறைநாகரிகத்தில் வங்காளம் மூழ்கியிருந்தது. அதை சீர்செய்ய பிரமசமாஜங் கண்டார். சீர்திருத்தம் இப்பொழுதும் சுலபமல்ல. கஷ்டந்தான். என்றாலும் அந்த நாளில் நிலைமை யென்ன? மதத்திலும் சீர்திருத்தத்திலும் கலையிட்டால் தப்ப முடியுமா? அவர் முற்பட்டார். விக்கிரக ஆராதனையை ஒழிக்க முற்பட்டார். ஒழுக்கத்தை வளர்க்க பாடுபட்டார். 'ரிலிஜியஸ் மன்' என்கின்றனர். இதன் பொருள் சமயபித்தர்கள் என்பதல்ல. ஒழுக்கமுடையவர் என்பது தான் பொருள். கலப்பு மணம் பிரம சமாஜக் கொள்கைகளில் ஒன்று.

பெண்களை இரக்கமின்றி அரக்கத்தனமாக நெருப்பில் தள்ளினர். அதைக் கண்டு ராம்மோகன் துடித்தார். கதறினார். தடுத்தார். தடுப்பதற்கு சட்ட மூலம் ஏற்பாடுசெய்து வெற்றிபெற்றார்.

### ஸ்ரீமான் பழ. நாச்சியப்ப செட்டியார்

கணவனை இழந்தவர்க்கு நாம்என்ன உதவி செய்கிறோம்? அவர்களைக் கொன்று விட்டாலும் பாதகமில்லை யென்று தோன்றுகிறது. ராம்மோகன் உடன்கட்டை யேற்றுதலை நிறுத்தும்போது, உயிருடனிருந்து துன்பப் படுத்தப் படுவார்களென்று கருதினார்? இல்லை. கல்யாணம் செய்துகொண்டு சுகமாக இருப்பார்கள் என்றே கருதினார். கண்ணீரை ஆறாகப் பெருக்குகின்றனர். ஒரு வயது விதவைகூட ஆயிரக்கணக்கில் இத்தேசத்தில் இருக்கின்றனர். இதைப்பார்த்துக் கொண்டு உயிருடன் இருக்கலாமா என்று தோன்றுகிறது. விதவைகள் படும் துன்பத்தைச் சொல்லிமுடியாது. ஒன்றிரண்டு கல்யாணம் தான் செய்யப்பட்டிருக்கிறது. இதற்கேற்பட்ட பாடு கொஞ்சமல்ல. உதவி செய்வார் இல்லை. இதற்கு உதவிசெய்து விதவைக் கோலத்திற் கிடந்து துன்பப்படும் பெண்கட்கு வாழ்க்கையைக் கொடுக்க வேண்டும். சடங்கின் மூலமாகச் செய்வது பெருங் கொடுமை. நாளுக்கு நாளாகப் போட்டுக் கொல்கின்றோம். விதவைப் பெண்கள் தீக்குழியில் தான் கிடந்து வேகிறார்கள். கட்டுப்பாடு போய்விட்டது. நாலுபேர் கூடினால் ஏழு பிரிவு. விதவைகள் வரவர சிறிது சிறிதாக வெளிவருகிறார்கள். புடவையை மாற்ற வேண்டும்; மறு கல்யாணம் செய்ய வேண்டும். அதைச் செய்ப முற்பட்டால் அதிலிருக்கிற சிரமம் தெரியும். அது லேசானதாக இல்லை.

### அ. புதூர் தி. நாராயணய்யர்

பெரியவர்களைப் போற்றினால் பெரியவராகலாம். வங்காளி புரட்சி செய்வான். சென்னைக்காரன் யோசித்துக் கொண்டிருப்பான். அவனுக்கு செயல் ஜாஸ்தி. நமக்கு புத்தி சாஸ்தி. 166 வருஷத்திற்கு முன்பு பெரிய அறிவாளியும் செயலாளருமான ராம்மோகன் பிறந்தார். டாகூர், விவேகாநந்தா எல்லாரும் பிரம சமாஜத்தில் சேர்ந்து தான் பெரியவரானார்கள். இந்திய தேசத்தைப் பிடித்துக்கொடுத்த 17வது வருஷத்தில் இவர் பிறந்தார். ஒரு சாமியிருந்தால் நல்லது. மகமதியருடன் போட்டி போட்டு 1000, 10,000 சாமி வைத்தனர். கொள்கையே போய்விட்டது. ராம் மோகனர் வேத—உபநிஷத்துகளைப் படித்தார். அங்கே விக்கிரகம் என்ற பேச்சே கிடையாது. ஆகலால் அதை ஒழிக்கவேண்டுமென்றார். பெண்களை நாம் உருப்பட விடுகிறதில்லை. 12 வயதானால் ஒருவனிடம் கட்டிக்கொடுத்து விடுகிறோம். எவனையாவது பிடித்து அவள் தலையில் கட்டிவிடுவது கடமை யென்று கருதுகிறோம். எப்படி பெண் குலம் உயரமுடியும்? 166 வருஷத்துக்கு முன் பிறந்த அவர் இன்று நம்மை இங்குவந்து தட்டியெழுப்புகிறார். இது தான் மகான்களுடைய செயல். இவர் பிறந்தது தெரியுமா? வாழ்ந்தது தெரியுமா? என்றாலும் இன்று நாம் தெரிந்து கொள்கிறோம். இவர் பெண்களின் தெய்வம்

### ஸ்ரீமான் சொ. முருகப்பா

ராம் மோகனரின் விழாவை நடத்துவதன்மூலம் அவருடையகொள்கையை வளர்க்கலாமென்றே இவ்விழாவுக்கு ஏற்பாடு செய்தேன். அவர் பெரும் படிப்பாளி. ஆங்கிலம், வங்காளி, ஹிந்தி ஆகிய மொழிகளில் வேத உபநிஷத்துகளை மொழிபெயர்த்திருக்கிறார். பல பாஷையில் பண்டிதர். பெண்களைப்

(12-ம் பக்கம் பார்க்க)

# அமராவதிபுதூரில் ஆண்டு விழா

(சமது நிருபர்)

இவ்வூர் காந்தி சமதர்ம பாடசாலையின் பனிரெண்டாவது ஆண்டுவிழா வழக்கம் போல், மகாத்மா பிறந்த நட்சத்திரமாகிய மகத்தில் (22-9-38) கொண்டாடப்பட்டது. பள்ளிக்கூடத்தின்முன்னால் போடப்பட்ட கொட்டகையில் தலைவர் சொ. முருகப்பா அவர்கள் 'குமரன்' ஆசிரியர் மத்தியானம் 3-30 மணிக்கு வந்தார்கள். அவரை மகாத்மா விலாஸ் பங்களாவிலிருந்து பள்ளிக்கூட ஆசிரியர்களும், மாணவர்களும், பெரிய மனிதர்களும், கொட்டகைக்கு அழைத்துவர அக்ராசனம் வகித்தார். வரவேற்புப் பத்திரம் வழங்கப்பட்டது. அறிக்கையை திரு. இ. நாராயணன் அவர்கள் வாசித்தார்; பள்ளிக்கூடத்தில் 72 பிள்ளைகள் படிக்கிறார்கள்; மூன்று ஆசிரியர்கள் கற்றுக் கொடுக்கிறார்கள்.

தலைவர் தமது முன்னுரையில் குறிப்பிட்டதன் சாரம்:—

இன்று ஒரு சிறந்தநாள். மகாத்மா திருநாள் பல ஆண்டுகளுக்கு முன்பே இவ்வூரில் ஆரம்பித்துக் கொண்டாடப் படுகிறது. மகாத்மாவைப் பாராட்டுவதில் இவ்வூர் பேர்பெற்றது. இவ்வாண்டில் ஒருவாரம் இவ்விழாவைக் கொண்டாட வேண்டுமென்று எங்கும் ஏற்பாடாயிருக்கிறது. இன்று ஆரம்பவிழா. வெளிநாட்டார் 100க்கு 100ம் படித்திருக்கின்றனர். நம் நாட்டில் 100க்கு 10கூட இல்லை. இப் பள்ளிக்கூடம் ஏற்பட்டு 12 வருஷமாகிறது. இங்கே கட்டாயக்கல்வி மாதிரி எல்லா பிள்ளைகளும் படித்திருக்கின்றனர். இதன் ஆசிரியர் நாராயணய்யர். ஒரு தனி மனிதன். பெரும் உழைப்பாளி. ஊரில் நடக்கும் சகலத்திலும் கலந்து உதவிபுரிபவர். இப்படி மனிதன் ஊருக்கு ஒருவராவது வேண்டும். நண்பர் பிச்சப்பா இந்தப் பள்ளிக்கூடத்தில் மிக்க ஊக்கமுடையவர். இருவரால்தான் இது சாஸ்வதமாக நடைபெற்று வருகிறது. மகாத்மாதிருநாளைக் கொண்டாடுகிறோம். மகாத்மா சிறந்த லட்சியபுருஷர். அவரைப் பாராட்டுவதென்றால் அறுபத்து மூவர் மடத்தில் குருபூஜை நடத்துவது போலல்ல. அவருடைய கொள்கைகளையனுசரிக்க முயலவேண்டும். சங்கங்களில் தீர்மானங்களும் விழாவும் நடப்பது போதாது. கதர், தீண்டாமைவிலக்கு முதலியவற்றை வாழ்க்கையில் கொண்டுவர வேண்டும். செயல்தான் நமக்கு நல் வாழ்வைத் தரக்கூடியது.

பிறகு,பிள்ளைகளின் சிறியநடிப்புகள், சம்பாஷணைகள். 'தேசபக்தி', 'நாகரீகம்' 'தமிழ்' 'கோபாலகிருஷ்ண கோகலே' 'மகாத்மா காந்தி' முதலியவர்களின் வாழ்நாளைப்பற்றிப் பேசினார்கள். 'வேடன் ஒருவன்' என்ற நடிப்பை குழந்தைகள் மிகவும் திறமையாக நடித்தனர். சாரதா சட்டத்தை விளக்குவதற்காக 'சசிலா கல்யாணம்' என்ற பால்ய விவாகத்தடைக் கதையை பெண்பிள்ளைகளும், ஆண் பிள்ளைகளும் மிகவும் திறமையாக எல்லோரும் கண்டு ஆனந்திக்க நடித்தார்கள். திருவாளர், வயி. நாக. ராம. அ. இராமநாதன் செட்டியார் தேசபக்தர் கோபால கிருஷ்ண கோகலேயின் உருவப்படத்தை 'மாணவர் சங்கத்தின்' சார்பாக அவர் கல்விக்குப் பாடுபட்டதை விளக்கித், திறந்துவைத்தார். கும்மி, கோலாட்டம், பெண் குழந்தைகளால் அடிக்கப்பட்டது. சாரணப்படையினர், பல தேகாப்பியாசம் செய்தும், பிரமிட்செய்தும் காண்பித்தார்கள்.

பிறகு, தலைவர் முடிவுரையில், குழந்தைகளின் பேச்சு, பாட்டு, இவைகளால் நமக்குத் தந்த ஆனந்தத்தை விவரித்து, இம்மாதிரியான சக்தி பொருந்திய குழந்தைகளை இன்னும் நல்வழியில் பயிற்றுவித்தால் தேசத்திற்கே புத்துயிர் உண்டாகுமென்று சொன்னார். திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் அவர்கள் வந்தனங் கூறுமுகத்தான், "17 வருடங்களுக்கு முன் நானும், நண்பர் சா. சோமசுந்தரம் செட்டியாரும் மகாத்மா திருநாளை மக நட்சத்திரத்தன்று ஆரம்பித்தோம். பொது ஜனங்கள் ஒத்துழைத்தார்கள். நாங்கள் ஊரில் இல்லாத காலத்திலும் பொது ஜனங்கள் இந்த விழாவை நடத்தினார்கள். இந்த ஊரில் வேறு தேர், திருநாள் கிடையாது. இதுவே திருநாள். இந்த விழாவிற்குத் தான் சொந்தக்காரர், மாப்பிள்ளைகள் விருந்துக்கு வருவது வழக்கம். இன்று வெளியூர்களிலிருந்து பலர் வந்திருப்பினும் வழக்கமான திருநாள் போல இல்லை. காந்தி அடிகள் பிறந்த திருநாளை அக்டோபர் இரண்டாம் தேதி கொண்டாடுவதென "வாலிபர் சங்கம்" தீர்மானித்திருப்பதாகச் சொல்லப்பட்டது. வழக்கத்தை ஏன் மாற்றினார்களென்று தெரியாது எனக்கு அதிலே வருத்தமில்லை. ஒரு நல்ல காரியத்தில் அதிலும் மகாத்மா திருநாளில் இரண்டுவித அபிப்ராயத்தை உண்டாக்க வேண்டாமென்று நினைத்தேன். நல்லகாரியங்கள் எப்படியும் நடக்கவேண்டும். எப்படியும் திருநாள் இன்னும் பத்துநாளில் நடக்கும். இது பொது ஜனங்களுடைய திருநாள். இன்றைய ஆண்டுவிழா ரொம்ப சிறப்பாக சந்தோஷமாகநடந்தது"என்று கூறி எல்லோருக்கும் வந்தனம் சொன்னார்கள். இரவு வெளியூர் அன்பர்களுக்கு, பிச. சுப்பிரமணியன் அவர்கள் "மகாத்மா விலாஸ்"ல் விருந்தளிக்கப்பட்டது.

இரவு 9 மணிக்கு'குலசேகரன்'நாடகம், மாணவ, மாணவிகளால் நன்றாய் நடித்துக் காட்டப்பட்டது. இரவு 11-30 மணிக்கு 600, 700 ஜனங்கள் பார்க்க குலசேகரன் நாடகம் சகலவித மங்கள வாழ்த்துடன் முடிந்தது.

—

## சிறுபிள்ளைகளுக்கு சுயேச்சை கூடாது.

"ஓர் ஒழுங்கு என்பதில்லாவிட்டால் அமைதி, பத்திரம், நியாயம் என்பதே இல்லாது போய்விடும். இந்த மூன்றும் சிறுபிள்ளைகளுக்கு மிகவும் அவசியமானவை. ஒழுங்குத் திட்டமென்பதும் சிறுபிள்ளைகளுக்கு பூரண சுயேச்சை வேண்டுமென்பதும் உண்மையான கொள்கையாகமாட்டா. அவற்றினால் விளையக்கூடிய தீங்குகள் பல. எப்படி வயல்களை, வேலை செய்யாது விட்டுவிட்டால் அவைகள் ஒருநாளும் தோட்டங்களாக மாறமுடியாதோ, அதேபோல, சிறுபிள்ளைகளையும் கவனியாது சுயேச்சையாக விட்டுவிட்டால் அவர்கள் திருந்திய மனுஷ்யராக வரமுடியாது என்பது எல்லோரும் கவனிக்கத்தக்க விஷயமாகும்" என்று அபெர்டீன் சர்வகலாசாலையைச்சேர்ந்த மனோதத்துவ ஆராய்ச்சி இலாகா டாக்டர் ரெக்ஸ் நைட் கூறுகிறார்.

—

## குதிரைக்கு கார் சவாரி

இங்கிலாந்திலேயே குட்டையான ஷெட்லாந்து மட்டக்குதிரை 28 அங்குல உயரந்தானிருக்கிறது. அதன் பெயர் "டிட் பிட்". அதன் எஜமானி மிடில் செக்ஸைச் சேர்ந்த ரேஸ்பரியிலிருக்கும் டாப்னிஷாம்ஸ் எனும் மாது. ஆறு வருஷகாலமாக இந்த மட்டக் குதிரையை வளரச்செய்ய எவ்வளவோ பிரயாசைப்பட்டும் பிரயோஜனமில்லாமற்போகவே, இம்மாது அக்குதிரையை தன்னுடன் காரில் அழைத்துக் கொண்டு வெளியே செல்கிறாராம்.

—

140 பவுண்டு எடையுள்ள ஒரு மனிதனுடைய தேகத்திலே 7 கட்டி சோப்பு செய்வதற்குப் போதுமான கொழுப்பும், 9000 பென்ஸில்கள் செய்வதற்குப்போதுமான கார்பனும், 2200 நெருப்புக்குச்சித்தலைகள் செய்வதற்குப்போதுமான பாஸ்பரஸும், ஒரு டோஸ் பேதியுப்புக்குப் போதுமான மாக்னீஷியமும், ஒரு ஆணி செய்வதற்குப் போதுமான இரும்பும் ஒரு கோழிக்கூண்டை வெள்ளை யடிப்பதற்குப் போதுமான சுண்ணாம்பும், ஒரு நாயினுடைய உடம்பில் இருக்கும் தெள்ளுப்பூச்சிகளைக் கொல்லுவதற்குப் போதுமான கந்தகமும் 10 காலன் தண்ணீரும் இருக்கும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.









# ஸெக் பிரச்னை முற்றுகிறது.

## அக்டோபர் 1உ படையெடுப்பு?

சென்ற மகாயுத்தத்தில் முதன் முதலாக ஆஸ்திரியாவில் கலவரம் ஆரம்பித்தது. இன்றைய நிலையில் செகோஸ்லவாகியாவில் புகை கிளம்பத் தயாராயிருக்கிறது. ஆனால் சென்ற மகாயுத்த காலத்தில் இந்தப்பெயருடன் ஒரு நாடு இருக்கவில்லை; மகா யுத்தம் முடிவடைந்தபின்னர் உருக்குலைக்கப்பட்ட பல துண்டுப் பிரதேசங்களை ஒரு புதிய பிரதேசமாக அமைத்து சிறுபான்மையோரான பலவேறுபாடானவற்றை ஒன்று கூட்டி சர்வதேச சங்கத்தின் ஆதரவினால் இந்நாடு தோன்றிற்று. இதற்கென்று ருஷியாவில் கைதிகளாயிருந்த 45000 செக்கியர் விடுவிக்கப்பட்டு இந்நாட்டில் குடியேற அநுமதிக்கப்பட்டனர். இந்நாடு ஆரம்பமான தேதி 1920௵ பிப்ரவரிமீ 20. இன்று ஏறக்குறைய 20 வருஷங்களாகப்போகின்றது. இதில் வசிக்கும் ஜாதியினரின் விகிதத்தைப் பார்ப்போம். 1930-௵ ஜனக்கணிதத்தின்படி இந்நாட்டில் செக்—ஸ்லாவாக் ஜாதியினர் 62·92%ம், ஜெர்மானியர் 22·32%ம், மாகியார் என்ற ஹங்கேரியினர் 4·78%ம், ருதேனியர், 3·79%ம், யூதர்கள் 1·29%ம், போல் ஜாதியினர் 0·56%ம். மீதியுள்ள விகிதத்திற்கு பல தேசத்தினருடைய மிகச் சிறு கூட்டங்களுமா யிருக்கின்றனர். முக்கியமாய் 5-நாட்டினர் இருக்கின்றனர். அவர்களுக்குள் தனிப்பட பெரும்பான்மை வகிக்கும் ஒரே நாட்டினர் ஜெர்மானியரே. இப்போர்க்கொத்த அவியல் நாட்டிற்கு அது ஆரம்பித்த நாள் முதல் இடைஞ்சல்கள் அநேகம். ஆனால், தன் நலங்கருதாச் சேவைசெய்த மாசாரிக், டாக்டர் பெனஸ், இவ்விருவர்களுடைய பெருமுயற்சியால் இந்நாடு சிறு பான்மையோர் பலரும் ஒத்துழைக்க ஒரு மாடல் குடியரசு நாடாக விளங்கியது. ராஜீய கக்ஷிகள் என்ற பேச்சைத்தவிர ஜாதி, தேச வேற்றுமைகள் கிளம்பவேயில்லை. இவைகிளம்புமென்று எதிர்பார்க்கப்படவுமில்லை. பெரும்பான்மையான வேறு நாட்டினராகிய ஜெர்மானியர் ராஜீயக் கக்ஷிப்பாகுபாட்டின்படி பிரிந்திருந்தால் ஜெர்மானியர் என்ற தேச ஒற்றுமையும் தென்படாமலே இருந்தது.

ஜனநாயக அரசாங்க அமைப்பில் பிரான்ஸ் தேசத்திற்கு அடுத்தபடியாக இதைக் கூறலாம். பல இன்னல்களுக்கிடையே தோன்றிய தேசமானதால், அரசாங்கத்தில், இத்தேச மக்கள் அதிகமான சிரத்தை கொண்டிருக்கின்றனர்.

இத்தேசத்தின் மேற்கு பகுதியில் சூடெடென் பிரதேசத்தில் ஜெர்மானியர்களும், தெற்கு பாகத்தில் ஆஸ்திரியர்களும், ஹங்கேரியர்களும், வடக்கு பாகத்தில் போலிஷ்காரர்களும் நிலைபெற்றிருப்பதனால், பெரிய தேசங்கள் மூலமாக இத்தேசத்திற்கு எப்பொழுதாகிலும் ஆபத்து வரும் என்ற நிலைமையில், இத்தேச அரசாங்கம் சதா விழித்துகொண்டிருக்க வேண்டியதாயிற்று.

ஜெர்மனியின் சர்வாதிகாரியான ஹெர் ஹிட்லரின் நெடுநாளைய விருப்பம், ஜெக்கோஸ்லோவேகியாவை ஜெர்மனியோடு இணைத்துகொள்ள வேண்டுமென்பதாகும். ஹிட்லர் ஆஸ்டிரியாவை சப்தமின்றி ஆக்ரமித்த நாள் முதல் அந்நிய நாட்டுக்கக்ஷி என்ற பேதம் செக் ஜெர்மானியரிடையே தலைதூக்க ஆரம்பித்து, போலந்தினரும், ஹங்கேரியினரும் அத்துறையில் இயக்கத்தை துவக்கிவிட்டனர். அந்த நாட்டினருள்ள பிரதேசங்களை அந்தந்த நாட்டிற்கே ஒப்படைத்துவிட வேண்டுமென்ற பாத்யதைகள் கிளம்பின. இவ்வருஷம் ஏப்ரல் மாத வாக்கில் செக் ஜெர்மானியக் கக்ஷித் தலைவரான ஹெர் ஹென்லீன் மும்முரமாக தங்களுக்கு சுயேச்சை அளிக்கப்பட வேண்டும் என்று வெளியிட்டார். ஜெக்கோ அரசாங்கம், சூடெடன் பிரதேசங்களில், சூடெடென் ஜெர்மானியர்களுக்கு எவ்வளவு தூரம் விட்டு, கொடுக்க வேண்டுமோ அவ்வளவு தூரம் விட்டு கொடுத்திருக்கிறது. ஆனால் ஹிட்லரினால் தூண்டப்பட்ட, ஹென்லின் அவைகளைக்கொண்டு திருப்தியடைவதாகக் காணோம். ஹிட்லரும் தன் சம்பந்தமில்லாமல் இவர்கள் ஒன்றும் செய்துவிடக் கூடாதென்று எச்சரித்துவிட்டு இன்றுவரை பலவிதப்பட்ட தூதுகளை வற்பதும் யோசிப்பதுமாயிருந்தனர் ஸெக்குக்கும் ஜெர்மனிக்கு மிடையே சமரஸ முண்டுபண்ணுவதற்கான ஹிட்லர்—சேம்பர்லென் சம்பாஷணைகள் வெறும் பேச்சாகவே முடிந்தன. அக்டோபர் முதல் தேதிக்குள் நிறைவேறாவிட்டால் ஜெர்மானிய துருப்புகள் செக் தேசத்திற்குள் படையெடுத்துச் செல்லும் என்று முடிவாக ஹிட்லர் கூறிவிட்டார். முசோலனி சரி, சரி யென்கிறார். இங்கிலாந்தும், பிரான்சும், ருஷியாவும், இப்படையெடுப்பு ஏற்படின் தாங்கள் ஜர்மனியை எதிர்த்து யுத்தம் செய்யத் தயாரென்று எச்சரித்து விட்டார்கள். செக்கியரும் யுத்த சன்னத்தினராய் விளங்குகின்றனர். ஹிட்லர் கேட்கிறபடி செய்தால் தற்கொலை செய்து கொள்வதை யொக்குமென தீவிரமாக அவர்கள் நம்புகின்றனர். ஐரோப்பிய நாடுகளின் நிலைமை என்னவாகுமென்று சொல்வதற்கில்லை.

### ஹிட்லர் கோரிக்கை

ஸெக் நிலைமையைப்பற்றி ஹெர் ஹிட்லர் செய்த பிரசங்கத்தில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

"ஐரோப்பாவிலுள்ள பிரதேசங்கள் சம்பந்தமாக நான் கடைசியாக விடுக்கும் கோரிக்கை இதுதான். இந்தக் கோரிக்கையை நான் ஒருபொழுதும் விட்டுக்கொடுக்கமாட்டேன்,

"ஜெர்மனியின் பொறுமை முடிவுற்றுவிட்டது. நான் பிரிட்டனிடம் சமர்ப்பித்த அறிக்கையில் எனது இறுதியான கோரிக்கையைத் தெரிவித்திருக்கிறேன். ஜெர்மன் சாதியைச் சேர்ந்தவர்களில், ஜெர்மனிக்குத் திரும்ப விரும்புவோர் இப்பொழுதே உடனேயே அங்ஙனம் செய்ய அனுமதிக்கப்படவேண்டுமென்பது தான் அக்கோரிக்கை. அவர்கள் வசிக்கும் பிரதேசம் ஜெர்மன் ஆட்சிக்கு உட்படவேண்டும்.

"டாக்டர் பீனஸ் அந்தப் பிரதேசத்தை அக்டோபர் 1-ந் தேதியன்று ஜெர்மனியிடம் ஒப்படைத்தாக வேண்டும்.

"ஒன்றில் டாக்டர் பீனஸ் சுடேடன் ஜர்மனியர்களுக்கு விடுதலை யளிக்கவேண்டும். அல்லது நாங்களாக விடுதலையைப் பெற்றுக்கொள்வோம். யுத்தமா சமாதானமா என்கிற விஷயம் டாக்டர் பீனஸின் முடிவையே பொறுத்திருக்கிறது.

### முதல் தேதி யுத்தம்?

அக்டோபர் முதல் தேதி ஜர்மன் துருப்புகள் ஸுடேடன் பிரதேசத்தின் மீது படை யெடுக்குமென்று கருதப்படுகிறது.

### ஸெக்—போலந்து தகராறு

எல்லை நிர்ணயிப்பது சம்பந்தமாக, போலந்துக்கும் ஸெக்குக்கும் ஏற்பட்டுள்ள தகராறை சமாதானமாகத் தீர்த்துக்கொள்ளலாமென்று, ஸெக் தலைவர் போலந்துக்கு அறிவித்திருக்கிறார்.

### ஜவஹர்லால் அறிக்கை

லண்டனிலிருந்து பண்டித ஜவஹர்லால் விடுத்திருக்கும் அறிக்கையில், யுத்தம் வந்தால் இந்தியர் அனுதாபம் முற்றும் ஸெக்கோஸ்லோவேகியா பக்கமேயிருக்குமென்று குறிப்பிட்டிருக்கிறார்.

# "மாகாண வரியும் லஞ்சமும்"

எல்லா மோட்டார்கார் சொந்தக்காரர்களும் நாளது அக்டோபர் மாசம் முதல் வாரத்துக்குள் தங்கள் கார்களுக்கு ஏற்பட்டுள்ள மாகாண வரியை சர்க்கார் கஜானாக்களில்செலுத்திவைக்கவேண்டியவர்களாக இருக்கிறார்கள். அவ்விதம் அவர்கள் பணம் செலுத்துங்கால் அவர்கள் அந்தந்த செக்ஷன் குமாஸ்தாக்களுக்கு "மாமூல்" கொடுத்து வருவது யாவருமறிந்தவிஷயம். நமது மாகாண சர்க்காரால் லஞ்சம் கொடுத்தலையும் லஞ்சம் வாங்குவதையும் தடுத்தும் நடவடிக்கைகள் எடுத்தும் இன்னும் நின்றபாடில்லை. சமீபத்தில் வருகிற தீபாவளியை யுத்தேசித்து, சில டிரஷரிகளில் பணம்கட்ட வருகிறவர்களை நிர்ப்பந்தித்து வசூலித்து வருவதாகவும் தெரிகிறது. ஆகையால் கார்களுக்குப் பணம் கட்டும் நபர்களும் மற்றவர்களும் யாருக்கும் எம்மாத்திரத் தொகையும் கொடுக்கக்கூடாதென்று இதன்மூலம் கேட்டுக்கொள்ளப் படுகிறார்கள். லஞ்சம் ஒழிப்புக் கமிட்டியார் தீவிர நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளுத லவசியம்.

ஸாரதி

—

## காரைக்குடி முனிசிபாலிடி

டி. மு. ஆக்ட் 104, 105 4-வது உட்பிரிவின்படி பிரசித்தப்படுத்துவதாவது: 1938—39௵த்தின் இரண்டாவது அரை வருஷத்திற்கு காரைக்குடி முனிசிபல் எல்லைக்குள் வைக்கப்பட்டிருக்கும் கட்டை வண்டிகள், சைக்கிள்கள் இதர வண்டி வாகனாதிகளுக்கும் காரைக்குடி முனிசிபல் ஆபீசில் 1938-௵ அக்டோபர்-மீ 1உ முதல் 15உ வரைக்கும் ஆபீஸ்தினங்களில் காலை 11மணி முதல் மாலை 3 மணி வரையிலும் ரிஜிஸ்டர்செய்து நம்பர்கொடுக்கப்படும். ஷை தேதிக்குப் பிறகு நம்பர் இல்லாத வண்டி வாகனாதிகளை ஜப்தி செய்து முனிசிபல் ஆபீசில் வைத்து அபராதச் செலவு தொகையுடன் வசூலிக்கப் படும் என்று கமிஷனர் அறிவிக்கிறார்.

—

## தேவகோட்டையில் இரண்டு போலீஸ் ஸ்டேஷன்

(நமது நிருபர்)

தேவகோட்டை போலீஸ் ஸ்டேஷன் தாலூக் ஸ்டேஷன் டவுன் ஸ்டேஷன் என இரண்டு ஸ்டேஷன்களாகப் பிரிக்கப்பட்டு டவுன்ஸ்டேஷனுக்கு திரு. வெள்ளைச்சாமி தேவரும், தாலூகா ஸ்டேஷனுக்கு திரு எம். அருளானந்தமும் சப் இன்ஸ்பெக்டர்களாக இருப்பார்கள். இந்த ஏற்பாடு அக்டோபர்முதல்தேதிமுதல் அமுலுக்கு வருமென்று தெரிகிறது.

—

## கல்லுப்பட்டி மெய்யப்பா ஹையர் எலிமெண்டரி ஸ்கூல்

ஹைஸ்கூல் தசரா ஸ்போர்ட்ஸ் 30-9-38 1-10-38, ஆகிய இரு தினங்களிலும் நடைபெறும் என்று அறிவிக்கப்படுகிறது.

குமரன்

காரைக்குடி

வெகுதானிய-ஹு புரட்டாசி-மீ 13-உ

## மகாத்மா திருநாள்.

இவ்வாரம் முழுதும் மகாத்மா திருநாளாக தேச முழுமையும் கொண்டாடப்பட்டு வருகிறது. உலகத்துக்கே ஒரு புது வழியை வகுக்கவல்ல இப்பெரியாரது நாள் யாவராலும் கொண்டாடப்படத்தக்கதென்பதில் ஐயமுமுண்டோ? இதற்குமுன் இந்நாட்டில் ஏராளமான ஆசாரியர்களும் தலைவர்களும் தோன்றியிருக்கின்றனர். ஆனல் அவர்கள் யாவரும் கட்சிப் பிரதிகட்சிகளிலகப்பட்டு சிரமத்துடன் தேசத்தின் சிறுபகுதிகளில் செல்வாக்குப்பெற்று வாழ்ந்து சென்றதாகவே அறியக்கிடக்கிறது. மதத்தாலும் ஜாதியாலும் மனப்பல்பினுலும் பிளவையே நோக்கமாகவும் வாழ்க்கையின் லட்சியமாகவும் கொண்டுள்ள கோடிக்கணக்கான மக்கள் நிறைந்த இத்தேசத்தில் ஒரு பெருந்தலைவராகப் பல்லாண்டு நின்று சிறப்புறும் பெருமை மகாத்மா காந்தி ஒருவருக்குத்தான் உண்டு. மதப்பிடிவாதமுள்ளவர் சிலர். பிறமத ஆக்கங்கண்டு பொங்கும் மதவாதிக்கு ஒற்றுமை சமரசம் என்பது நஞ்சாக இருக்கிறது. அப்படியே ஜாதிப்பித்துக்கொண்டவர் நிலையுமிருக்கிறதென்பதில் சந்தேகமில்லை. பொருமையும் வறுமையும் பிற துன்பங்களும் நிறைந்திருக்கின்றன. இப்படிப்பட்ட தேசத்தில் ஒருவர் தலைதூக்கி முன்வருவது சுலபமேயல்ல. அப்படித் தலைவரானலும் எத்தனையோ சூறாவளிகட்கிடையில் சாய்ந்து போவது திண்ணம். தலைதூக்குபவரைச் சாய்த்துவிட்டுத் தான் மேலேற விரும்புவதே இங்கு இயல்பு. ஒரு தலைவர்பொதுமனிதர் என்றபெயருடனும், திட்டமான பெருங்குற்றம் சுமத்த முடியாமலும், எதிர்ப்பதென்றே காப்புக் கட்டிக்கொண்டாலும் இவரைக் காட்டிலும் சிறந்த தலைவர் தோன்ற முடியாதென்று சொல்லும்படியாகவும் மகாத்மா விளங்குகிறார். தலைமைதாங்கி இத்தனை நீண்ட நாள், நீதி தவறி ஒரு கட்சியைச்சார்ந்தவர்என்று கூற எவராலும்முடியாமலிருப்பது ஆச்சரியமானதாகும். அவருடைய வாழ்க்கையும் எண்ணமும் யாவும் தேசத்திற்கும் மனித சமூகத்திற்கும் அர்ப்பணம் செய்யப்பட்டுள்ளன. அவருடைய சக்தியைப் பொது ஜனங்கள் உணர்ந்து செயலாற்றிப்பயன் படுத்திக்கொள்ளும் சக்தியைப் பெற்றிருக்கவில்லை. என்றாலும் மகாத்மாவின் தலைமையில் இருபதாண்டு கழித்ததிலிருந்து நாடு ஒருமுகமாகச் செல்ல ஆரம்பித்திருக்கிறது. சிறிய சிறிய அரசியல் கருத்துகட்கு இடமின்றி ஒரே வழிப்பட்டிருக்கிறதென்றுகூறத் தயங்கவேண்டியதில்லை. ரத்தஞ் சிந்தாமல்ஜனசமூகத்தை நடத்தி நாட்டைப் பண்படுத்தி யிருக்கிறார் அப்பெரியார்.

இன்று ஐரோப்பா கொதிக்கிறது. யுத்த முழக்கம் ஊர்தோறும் வீடுதோறும் முழங்குகிறது. அக்டோபர் முதல் தேதி யமனுக்கு விருந்திடும் முதல் நாள் என்று ஹிட்லர் உறுமுகிறார். முசோலினி அவரைத்தொடர்ந்து கர்ஜிக்கிறார். ஒரு தேசமும் பாக்கியின்றிப் போர் முரசடிக்க எல்லா நாடுகளும் தயாராக இருக்கின்றன. என்ன விளையுமென்று சொல்ல முடியவில்லை. அங்கே தேசங்கள்தோறும் கொலைக்குத் திட்டம்போட்டு முடிந்திருக்கிறது. பிறரைக் கொல்வதில் யார் சமர்த்தரென்று பார்த்து அவருக்கு உயர்வு கொடுக்கப்படுகிறது. கொலைத் தொழிலில் எவன் திறமைசாலி யென்று கணிப்பதையே, அடிப்படையாகக் கொண்டது யுத்தமென்று கூற வேண்டியதில்லை. அப்படிப்பட்ட ஹிம்சைவழிதான் இன்று சுதந்திரமுடைய நாடுகளின் தலைவர்கள் கண்டு பிடித்திருக்கும் வழியாகும். இப்படிப்பட்ட காலத்தில் நமது தேசத் தலைவர் காந்தியடிகள் “அஹிம்சை” “அஹிம்சை” என்று போதித்து வருகிறார். நமது நாட்டில் தோன்றிய ஹிம்சை இயக்கமெல்லாம் போய் மறைய காந்தியடிகளின் அஹிம்சை இயக்கமே இங்கு மேலோங்கி நிற்கிறது. இவ்வளவு பெரிய யுத்தத்திற்கு இடையில் இந்த அஹிம்சையைக் கொண்டு மகாத்மா வெற்றி பெறுவாரென்பதில் சந்தேகமில்லை. யுத்தத்தில் நாம் வெற்றிபெற முடியாதென்பது திண்ணம். அஹிம்சையில் மற்றவருக்கு நம்பிக்கை கிடையாது. கையாளவும் முடியாது. எனவே நமது அஹிம்சைவழி மற்றவரைத் தோற்கடிக்குமென்பதில் சந்தேகப்படவேண்டியதில்லையன்றோ? காந்தியடிகள் பிறந்த நாள் அக்டோபர் 2-ம் தேதியாகும். அக்டோபர் 1உயே யுத்தம் துவங்குமென்று உலகெலாம் எதிர்பார்க்கிறது. யுத்தம் துவங்கினல் இந்தியாவின் அதிர்ஷ்டம் சித்திக்குமென்பது பலருடைய கருத்து. எப்படியும் இந்த ஆண்டு காந்தியடிகளின் விழா புத்துணர்ச்சியை யுண்டாக்கிறதென்பதில் யாருக்கும் சந்தேகமிருப்பதற்கில்லை. எழுபதாண்டிருந்த மகான் காந்தியடிகள் இன்னும் பல்லாண்டிருந்து இந்திய மக்களின் நல்வாழ்வைக் கணிப்பாராக.

## எண்டிசைக் காட்சி

### சி. பி.

திவான் சி. பி. திருவாங்கூரில் நல்ல வேட்டையாடுகிறார். பழைய ஒத்துழையாமை காலத்தில் இந்திய வைசிராய் வில்லிங்டன் காட்டிய கைவிரசெல்லாம் சி. பி. திருவாங்கூரில் காட்டுகிறார். அவருடைய குருமூர்த்தி அடைந்த பலனைத்தவிர சிஷ்யர் புதுப்பலனை அடைய முடியாதென்பது திண்ணம். மகான் நாராயண குருதேவர் மலையாளத்தில் தோன்றி ஹரிஜனங்களை உயர்ந்த மனித சமூகமாக்கினர். காங்கிரஸ் உணர்ச்சி பெருகிற்று. இயற்கையாக கிறிஸ்தவர் மலிந்தனர். இவை யெல்லாம் சேர்ந்து ஹரிஜனர் ஆலயப் பிரவேசம் அரும்பியது. ஆனல் சி. பி. தான் இதைச்செய்து முடித்தாரென்று பாவாடை விரித்தார்கள். பலன் சித்திக்கிறது. உண்மையான புகழல்ல அது. அதை சி. பி. யின்மேல் ஏற்றிய பாவம் திரண்டு பழி மூட்டையாக அவர் மேலேறி வஞ்சம் தீர்க்கிறது போலும்! ஆஹா! திருவாங்கூர் ரணகளமாகிறது.

### குழந்தை மகாராஜா

மகாராஜா மிக இளைஞர். நல்ல குணமுள்ளவர். ஆனலும் என்ன செய்கிறது. பொதுஜன எதிர்ப்புத் தாறுமாருக ஏற்படும்படி நிலைமை யேற்பட்டுவிட்டது. மந்திரிகளின் புத்திவிரைத்தப்போனல் என்ன செய்யமுடியும்? இருந்தாலும் மற்ற மகாராஜாக்களைப் போல் தாமும் பிரிட்டன் போரில் இறங்கினல்முழுஉதவியும்செய்கிறேன்என்று மகாராஜாவும் வைசிராய்க்கு ஒரு தந்தி கொடுத்திருக்கிறார். உள்ளூர்ப்போரில் அதற்குள் தேர்ச்சி பெற்று விடலாம். சிறையும், தண்டனையும், சாவும், கலகமும் பெருகி திருவாங்கூர் ராஜ்யமே ஒரு போர்க்களமாகி நிற்கிறது. இதற்கு பிரிட்டிஷ் ஜனங்கள் சைன்யமாகத் திரண்டு கொண்டிருக்கிறது. முதலில் வைசிராயும் சேர்ந்து இந்த வரகைத் திரிக்குப்படி நிலைமை முற்றி வருகிறது. இதற்கிடையில் பிரிட்டிஷ்—ஜெர்மன் யுத்தத்திற்கு திருவாங்கூர் துணைபுரியுமென்ற செய்தி வரவேற்புக்குரியதன்றோ?

### இந்திய உதவி

யுத்தம் தோன்றினல் இந்தியா என்ன செய்வது என்ற கேள்வி முக்கியமானது. இதற்குப் பதில் சொல்ல வேண்டிய பொறுப்பு காங்கிரஸையே சார்ந்திருக்கிறது. இந்திய வைஸிராய் இதைப்பற்றி யோசிக்க வேண்டியதில்லை. சமஸ்தான மன்னர்கள் அநேகமாகத் தெரிவித்துவிட்டார்கள். காங்கிரஸ்தான் இந்திய பொதுஜனப் பிரதிநிதி. அது சொல்வதைத்தான் இந்திய மக்கள் கேட்பார்கள். ஆனல் காங்கிரஸ் இந்தப் பொறுப்பைக் காரியக் கமிட்டிக்கு சர்வாதிகாரமாக விட்டிருக்கிறது. ஒரு விஷயம் கவனிக்கத்தக்கது. சுதந்திரமில்லாத தேசம் யுத்தத்தில் சேர என்ன இருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறது. இந்தியாவுக்கு சுதந்திரமளிக்கப்பட்டால் போருக்கு வேண்டிய உதவி செய்யும் என்பது தொனிக்கிறது. தவிர செக்கோஸ்லோவேகியாவின் கட்சி நியாயமானதென்று தெளிவுபடக் கூறியிருக்கிறது. இவைகளை யுணர்ந்து இந்திய மக்களின் உரிமை வேட்கையை மதித்து பிரிட்டன் நடந்துகொள்ளவேண்டும். இந்தியாவின் நட்பு பிரிட்டனுக்குப் பெரும் உதவி யென்பதை யாரே மறுப்பார்!

### அனுபவமென்ன?

பிரிட்டன் யுத்தம் தொடங்கும் போதெல்லாம் ஒவ்வொரு நாடாக உரிமைபெற்றிருக்கின்றன. சில நாடுகள் பறிபோய் விட்டனவென்பதையும் ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும். அமெரிக்கா, தென்னபிரிக்கா, ஆஸ்ட்ரேலியா, ஈஜிப்ட் முதலிய நாடுகளின் பட்டியலில் இந்தியாவும் சேர்வதை பிரிட்டன் நல்லமாதிரியாக ஆதரிக்க முற்படவேண்டும். இதைப்பற்றி ஆங்கில அரசியல் நிபுணர் பலர் பலமுறைகளில் எடுத்துக் கூறியிருப்பதை அவர்கள் இந்த சமயத்தில் காலந்தவருமல் செய்யப் பின்வாங்குதல் கூடாது.

## காரைக்குடியில் காந்தி திருவிழா

(நமது நிருபர்)

காந்தியடிகளின் எழுபதாம் ஆண்டு விழா 24-9-38 சனிக்கிழமை தொடங்கி சிறப்பாக தினமும் நடைபெற்று வருகிறது. ஆரம்ப தினத்தன்று மாலை 5-30 மணிக்கு செக்காலை, சொக்கலிங்கம் சுகாதார நிலையக் கட்டிடத்தில் திரு. மெ. ராம. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் கொடி யேற்றினர். ‘குமரன்’ ஆசிரியர் திரு சொ. முருகப்பா அவர்கள் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. “காந்தியடிகளும் தீண்டாமையும்” என்னும் பொருள் குறித்து திருவாளர்கள் A. S. சீனிவாசன் அவர்கள் B. A. B. L. ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள், சிவப்பிரசாத் அவர்கள் ஆகியோர் பேசினர். 25உ ஞாயிறன்று மாலை 6மணிக்கு திரு. ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. திரு. சொ. முருகப்பா அவர்கள் ‘அப்பரும் காந்தியடிகளும்’ எனும் பொருள் பற்றி சொற்பொழிவு நிகழ்த்தினர்.

26உ திங்களன்று டாக்டர் எஸ். சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. “காந்தியடிகளும் மதுவிலக்கும்” எனும் பொருள் பற்றி திருவாளர்கள் டாக்டர் எஸ். எஸ். மணி அவர்கள், பழ. நாச்சியப்ப செட்டியார் அவர்கள், சா. கணேசன் அவர்கள் ஆகியோர் பிரசங்கம் செய்தனர்.

27உ செவ்வாயன்று முற்பகல்நூற்றல் போட்டியும் பாரதிபாட்டுப்போட்டியும் நடைபெற்றன.

28உ புதன்கிழமை மாலை 6 மணிக்கு திரு. எஸ். லட்சுமிரதன் பாரதியார் எம். ஏ. பி. எல். தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தேவகோட்டை ஹரிஜன மாணவர் பாட்டுப் பாடினர்; ஷை ஹரிஜன வாத்தியார் தீண்டாமையைப்பற்றிப் பேசினர். “காந்தியடிகளும் கைத்தொழிலும்” எனும் பொருள்பற்றி திருவாளர்கள் எஸ். சிவசுப்பிரமணிய ஐயர், ஹரிஜன் ரெங்கண்ணு, டாக்டர் கே. ஆர். ரத்னசாமி, சா. கணேசன் ஆகியோர் சொற்பொழிவு நிகழ்த்தினர். 2-10-38 ஞாயிற்றுக்கிழமை வரை விழா நடைபெறும்.

அலவாக்கோட்டை, சாரதா வாசகசாலையின் சார்பில் ஸ்ரீ சி. வெ. நா சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் தலைமையிலும், தேவகோட்டை சரஸ்வதி வாசகசாலையின் சார்பில் காரைக்குடி நகரசபை அங்கத்தினர் ஸ்ரீ சொ. நாராயணன் அவர்கள் தலைமையிலும், எஸ். சொக்கநாதபுரம், விவேகானந்த வாசகசாலையின் சார்பில் திரு. கரு ராம. ராமசாமி செட்டியார் அவர்கள் தலைமையிலும் காந்தி ஜயந்தி வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டதாகச் செய்தி கிடைத்திருக்கிறது.

## ஒரே பிரசவத்தில் 3 குழந்தைகள்.

(நமது நிருபர்)

உள்ளூர் இன்கம்டாக்ஸ் ஏஜண்டின் கிளார்க் ராமசாமி ஐயங்கார்மனைவி லட்சுமி அம்மாள் செப்டம்பர் 22உ காலை மெய்யப்பா பிரசவ ஆஸ்பத்திரியில் 1-20மணிக்கு ஒரு ஆண் மகவையும், 2-மணிக்கு ஒரு பெண் மகவையும் 2-30 மணிக்கு ஒரு ஆண் மகவையும் பிரசவித்தாள். தாயும் குழந்தைகளும் சௌக்கியமாக இருக்கின்றனர் ஏராளமான ஜனங்கள் இவ்வதிசயத்தைக் கூட்டங் கூட்டமாகச் சென்று பார்த்து வருகிறார்கள்.

### காந்திவாரக் கதர் விற்பனை

நேற்று மாலை 3 மணி முதல் 6 மணி வரை ஸ்ரீ சா. கணேசனும், ஸ்ரீ பழ. நாச்சியப்பனும் கதர் உருப்படிகளைத் தூக்கிச் சென்று விற்பனை செய்துவந்தனர். 235 ரூபாய்க்கு கதர் உருப்படிகள் விற்கப்பட்டிருக்கின்றன. இவ்வாரம் முழுதும் தொடர்ந்து நடைபெறுமென்றும் தெரிகிறது.

## ராமநாதபுரம் ஜில்லா போர்டுகள்.

### இணைப்பதற்கு சர்க்கார் நோட்டீஸ்

வட, தென் ராமநாதபுரம் ஜில்லா போர்டுகளை ஒன்ருக்கி இணைத்துவிட வேண்டுமென்று சர்க்கார் செய்துள்ள முடிவை நவம்பர் மாதம் 15-ந் தேதி முதல் ஏன் அனுஷ்டானத்துக்குக் கொண்டுவரக் கூடாதென்பதற்குக் காரணங்காட்டுமாறு மேற்படி இரு ஜில்லா போர்டு தலைவர்களுக்கும் சர்க்கார் நோட்டீஸ் அனுப்பியிருக்கின்றனர். சம்பந்தப்பட்ட ஜில்லா போர்டுகளின் தலைவர்கள் முன்னதாகவே தங்களுடைய போர்டுகூட்டங்களைக் கூட்டி அக்டோபர் 20-ந் தேதிக்குள் போர்டின் அபிப்பிராயத்தைச் சர்க்காருக்கு கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறது. இதே போன்ற நோட்டீஸ்கள் காக்கிநாடா, ராஜமகேந்திரம், சேலம், தர்மபுரி ஜில்லா போர்டுகளுக்கும் அனுப்பப்பட்டிருக்கின்றன.



## செருப்பு அணியும் பெண்கள்

காரைக்குடியைச் சுற்றிலுமுள்ள ஊர்களில் பெண்கள் பலர் செருப்புப் போட்டு நடக்க முற்பட்டிருக்கின்றனர். இருபதாண்டுகளாக இப்பகுதியில் உள்ள சீர்திருத்தப் பிரியர்கள் செய்துள்ள பல பிரசாரங்களில் இதுவும் ஒன்று. இப்பொழுது இது மிக மும்முரமாகப் பரவி வருகிறது.

செருப்பு அணியும் பெண்கள் இரண்டொரு விஷயத்தைக் கவனிக்கவேண்டும். சேலையுடுப்பதில் இப்பகுதியே ஒரு தினுசு. அனேகமாக எல்லாப் பெண்களும் சிறப்பாக இளம் பெண்கள் தங்கள் சேலையில் ஒரு அரைச்சாணவது வீதியில் இழுபட வேண்டுமென்று விரும்புகின்றனர். அது நாணத்தை மறைக்கிறதென்றோ அல்லது அது ஒரு தளுக்கு என்றோ கருதுகின்றனர். இதனல் இப்பெண்களின் சேலையின் ஒரு கரைப்பக்கம் நாற்றம் பிடித்த தெருவைக் கூட்டிப் பெருக்கிச் செல்கிறது. இது ஒரு அசுத்தமென்று அவர்கள் கருதவில்லை. இப்பொழுது இந்த இழுபடும் சேலையோடு செருப்பு போராட ஆரம்பிக்கிறது. இதற்கு இவர்கள் செய்யவேண்டியது ஒன்றுதான். சேலையை கணுக்கால் வரை நிற்கும்படி கட்ட முற்படவேண்டும். அதுதான் நாகரிகமாக இருக்கும். ஒரு திருத்தம் ஏற்படும்போது அதற்கிடையூருக இருக்கும் மற்ருெரு இடைஞ்சலை விலக்கிக்கொள்ள வேண்டியது அவசியமாகும். கண்ணன்.

## கலகம் அமைதியுற ஸ்ரீ. பெரி. நா கு. அவர்கள் உண்ணு விரதம்

(ஒரு நிருபர்)

போக்கலே, ஸெப். 16

பர்மிய இந்திய மக்களின் தொடர்புக்கு உழைத்துவருபவர்களில் ஒருவரும், அண்மையில் பர்மாவில் ஏற்பட்ட பயங்கரமான கலகத்தில் ஒற்றுமைக்காக கோலிய கமிட்டியில் சேர்ந்து உழைத்தவரும் காங்கிரஸ் வாதியுமான ஸ்ரீ பெரி. நா கு. அவர்கள் 9-9-38 இரவு முதல் உண்ணுவிரதமிருந்து சில இந்திய பர்மிய பெரியார்களின் வேண்டுகோட்கிணங்க 16உ காலை 8 மணிக்கு இவண் பிள்ளையார் கோவில் மடத்தில் பிரபல பௌத்தபிச்சுக்கள், பர்மிய இந்திய முஸ்லீம் பெரியார்கள் முன்னிலையில் தமது விரதத்தை ஆரஞ்சுரச மருந்தி பூர்த்தி செய்து கொண்டார்கள். இரண்டாவது முறை பர்மாவில் தோன்றிய கலகத்தில் ஆழ்ந்த துக்கமடைந்த அன்பர் பூர்ண அமைதியுற வேண்டுமென இறைவனைப் பிரார்த்திப்பதே தமது கடமையென்ற முடிவுக்கு வந்ததாயும் எனவே பர்மா வாழ் மக்களுக்கு தமது கடமையை நிறைவேற்றியதாகவும் இனி அனைவரும் பரஸ்பர ஒற்றுமையுடன் வாழ்ந்து வரவேண்டுமென்றும் மதங்களின் உண்மையான நோக்கங்கள்பற்றியும் தம்முடைய நீண்ட உருக்கமான பிரசங்கத்தில் குறிப்பிட்டார்கள். (பிரஸ்தாப பிரசங்கம் அன்பரால் எழுதிக் கொடுக்கப்பெற்று இவ்வூர் பிரபல வக்கீல் ஊலாட்டின் அவர்களால்பர்மியபாஷையில்மொழிபெயர்க்கப்பட்டது) விஜயம் செய்திருந்த பௌத்த பிச்சுக்கள் கலகத்தின் பின் பர்மாவில் யாருமே செய்யாத சிறந்த தியாகத்தை அன்பர் செய்திருப்பதை வெகுவாகப் போற்றியும் பர்மாவில் வதியும் சர்வ மக்களும் இனிமேல் அன்யோன்யமாக சகோதரர்கள் போன்று என்றைக்கும் ஒற்றுமையாக விருந்து வரவேண்டுமென்றுமிகச் சிறந்த உபந்யாசம் செய்தார்கள். அன்று விஜயம் செய்திருந்த சர்வ மக்களுக்கும் சிறந்த முறையில் தேநீர் விருந்து நடந்ததுடன் பௌத்த பிச்சுக்கள் முஸ்லீம்கள் அனைவரும் இருந்து குரூப் போட்டோ எடுக்கப்பட்டது.

பர்மாக் கலகம் சம்பந்தமாக, ரங்கூன் நகரில் எத்தகைய விவாதமும் நடத்தக் கூடாதென ஜில்லா மாஜிஸ்டிரேட் தடை உத்திரவு பிறப்பித்திருக்கிறார்.

## கேஸ் ராஜியாக முடிந்துவிட்டது

ஸ்ரீ ஆர். ஜி. ரெங்கராமானுஜ ஐயங்கார் (மாஜி முனிசிபல் கவுன்சிலர்) ஸ்ரீமான்கள் எல். முத்துக்குமாரு அம்பலம், ச. பி. நமு. முகமது இப்ருஹீம் ராவுத்தர், மாஜி கவுன்சிலர்கள், சித. நாகி. நாராயணஞ் செட்டியார் ஆகிய மூவர்மீது சென்ற கவுன்சிலில் செய்த ஒரு தீர்மானம் சம்பந்தமாகத் தொடர்ந்திருந்த மான நஷ்ட வழக்கு சென்ற 16உ தேவகோட்டை ஜாயிண்டு மாஜிஸ்ட்டிரேட் ஸ்ரீ. எம். எஸ். சிவராமன், ஐ. ஸி. எஸ். முன் விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. எதிரிகள் தாங்கள் மனுதாருக்கு மான நஷ்டமுண்டாகும்படி எதுவும் பேசவில்லையென்றும் தமக்கு மானநஷ்டம் வற்பட்டதாக மனுதார் கருதினல் அதற்காக தாங்கள் வருந்துவதாகவும் தங்கள் வக்கீல் மூலம் அவர்கள் கோர்ட்டில் எழுதிக்கொடுத்ததின் பேரில் வழக்கு ராஜியாக முடிந்துவிட்டதாக அறிவிக்கப்பட்டது.

## கண்டிரமாணிக்கத்தில் சூதாட்டம்

### தலா 50 ரூபா அபராதம்

(நமது நிருபர்)

திருப்பத்தூர் சப் இன்ஸ்பெக்டருக்கு கண்டிரமாணிக்கத்தில் சூதாட்டம் ஆடுவதாகத் தகவல் எட்டி 21-9-38உ பகல் 2-30 மணிக்கு சில கான்ஸ்டேபில்களுடன்யென்று மீனுக்ஷி அம்மாளின் வீட்டைப் பரிசோதித்ததில் சுமார் 20 செட்டியார்கள் ரூபாய் நகைகளுடன் சூதாடிக் கொண்டிருந்ததுகண்டு அரஸ்டுசெய்து 22-9-38 திருப்பத்தூர் சப்மாஜிஸ்திரேட்டு கோர்ட்டு ஸ்ரீ அப்பாத்துரையவர்கள் முன்பாக விசாரணைக்குவந்தது. அத்தனை பேரும் குற்றத்தை ஒப்புக்கொண்டதின் பேரில்தலா 50 ரூபா அபராதம் விதிக்கப்பட்டது.

## மலாய்நாட்டில் சன்மானம்

### கிலந்தான் சுல்தான் பாராட்டு.

மலாய் நாடுகளில்ஒன்ருகிய கிலந்தானில் ஆளும் சுல்தான் அவர்களுக்கு 21-7-38ல் நடைபெற்ற பிறந்ததினக் கொண்டாட்டத்தை முன்னிட்டு, சுல்தான் அவர்களால். கண்டரமாணிக்கத்திலிருந்து கிலந்தானுக்கு வந்து சென்ற இருபது வருஷங்களாக வியாபாரஞ் செய்யும் ஆரு. அ. அடைக்கலவஞ் செட்டியாரவர்களுக்கு, அவர் இந்நாட்டிற்குச் செய்துள்ள ஊழியத்தைப், பாராட்டி ஒரு மெடல் சன்மான மளிக்கப்பட்டதுடன், ஷை செட்டியார் அவர்கள் இந்நகர் பரிபாலன சங்கத்திற்கும் ஓர் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். இது வகைக்கு, கிலந்தானிலிருக்கும் இந்தியர் எல்லோரும் ஷை சுல்தான் அவர்களுக்குத் தங்கள் மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துவதுடன், ஷை செட்டியாரவர்களையும் பாராட்டுவதாக கிலந்தான் திரு. சி. அ. வெங்கிடாசலஞ் செட்டியார் எழுதுகிறார்

ஸெப்டம்பர் 17உ யோடு முடிவான வாரத்தில் நாலு லட்ச ரூபாய் பெறுமானமுள்ள தங்கம் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கிறது.

## சிவன்கோவிலில் களவு

(நமது நிருபர்)

பாலையூரில் உள்ள சிவன்கோவிலில் 22-9-38 இரவு திருடர்கள் புகுந்து மூல விக்கிரகத்தை அப்புறப்படுத்தியும் அம்மன் தாலியை களவாடிப்போனதாகவும் தெரிகிறது. மறுநாள் காலை காவற்காரன் திருட்டை அறிந்து கோயில் பூசாரியிடம் தெரிவிக்க ஷை யார் போலீசாருக்கு தெரிவித்து விசாரணையிலிருப்பதாகத் தெரிகிறது. கோவில் குருக்களும் டிரஸ்டியும் ஊரில் இல்லாததால் களவு போன சொத்துக்களின் விபரம் தெரியவில்லை. போலீசார் தீவிரமாய் புலன் விசாரித்து வருகிறார்கள்.

## மெய்வழிச்சபைத் தலைவர் வழக்கு

(நமது நிருபர்)

தேவ, செப் 26—

திருப்பத்தூர் தனலெக்ஷிமி அச்சு இயந்திர சாலையினர் துண்டுப்பிரசுரங்கள் வெளியிட்டதன் மூலம் தன் கௌரவத்திற்கும் மானத்திற்கும் பங்கம் ஏற்பட்டுவிட்டதாக ஷையூரிலுள்ள மெய்வழிச்சபைத்தலைவரால் அச்சுஇயந்திர சாலையினர்மீது கொடுக்கப்பட்டிருந்த பிராது இன்று வாயிதா ஏற்படுத்தப்பட்டிருந்தது. விசாரணையை வேடிக்கை பார்க்க பல ஊர்களிலிருந்தும் ஏராளமான ஜனங்கள் வந்திருந்தார்கள். பிராது பிற்பகல் சுமார் 3-மணிக்கு எடுக்கப்பட்டது. வாதி 5-மணிவரை விசாரிக்கப்பட்டார். இந்தக் கேசு 11-10-38உ யில் சிவகெங்கை முகாமில் விசாரணைக்கு ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது.

## மான நஷ்ட வழக்கு

(நமது நிருபர்)

தேவகோட்டை சக்கரபாணி அய்யர் செ. சு. மு. சுப்பிரமணியன் செட்டியார் வீட்டில் குடியிருந்தார். வாடகை பாக்கி ரூ 0-8-0 கொடுக்க வேண்டியதிருந்தது. 7-8-38உ ஷை அய்யர் வாதிதரப்பு 2-வது சாக்ஷியான வெங்கிடாசலம் செட்டியார் வீட்டுவழியாகப் போய்க்கொண்டிருக்கும் பொழுது வெங்கிடாசலம் செட்டியார் அய்யரை வீட்டிற்குள் கூப்பிட்டதாகவும் வாதி வீட்டிற்குள் போனதும் உள்ளிருந்த. எதிரி வாடகை பாக்கியைக் கேட்டாராம் வாதி தற்சமயம் ரூபாய் இல்லை பிறகு தருகிறேன் என்று சொன்னதற்கு பூணூலை அறுத்து விடுவேன் என்று சொன்னாராம். அப்படி யெல்லாம் சொல்லக்கூடாது என்று சொன்னதற்கு வாதியை எதிரி கன்னத்தில் அறைந்தார் என்று தேவகோட்டை பெஞ்சுக் கோர்ட்டில் கொடுக்கப்பட்ட பிராதில் 24-9-38உ எதிரிக்கு ரூ35 அபராதம் விதிக்கப்பட்டது அதில் மானநஷ்ட ஈட்டுக்காக வாதிக்கு ரூ 15 கொடுப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

அமெரிக்காவில், புது இங்கிலாந்து மாகாணங்களில் கடுமையான புயல் காரணமாக 600 பேர் உயிர் துறந்தனர்.

லட்சுமணபுரி சீதளாதேவி கோவிலில் ஒருவர் மரணத் தருவாயிலிருக்கும் தம் புத்திரனைக் காப்பாற்ற வேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டு, தனது நாக்கை அறுத்து பலிபீடத்தின் முன் சமர்ப்பித்தாராம்.

## தனவணிகப் பெண்ணுக்கு மணமகன் தேவை.

பால்ய விதவைப் பெண்ணுக்கு நாட்டுக்கோட்டை செட்டியார் வகுப்பு மணமகன் தேவை. 24 வயதுக்கு மேற்பட்டவராக இருக்கவேண்டும்.

காரியதரிசி

மாதர் மறுமண சகாய சங்கம்,

காரைக்குடி.

## தந்திச் செய்தி

### ரெங்கூன் மார்க்கெட்

(நமது நிருபர் தந்தி)

ரெங்கூன், செப் 28

| | |
|---|---|
| நசேன் | 95 |
| மீடோன் | 110 |
| பெரியமில் ஸ்பெஷல் | 225 |
| சிறிய மில் | 238 |
| மீடோன் யஸ். க்யு. | 283 |
| மீடோன் லூன்ஸெய்ன் | 245 |

### சிங்கப்பூர் மார்க்கட்

சிங்கப்பூர் செப் 26

ரப்பர் பீக்கல் ஒன்றுக்கு 32 வெள்ளி 33 காசு.

### சென்னை மார்க்கெட்

சென்னை, செப். 27உ

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத் தங்கம் | 36 | 0 | 0 |
| ஷை வாய்தா | 36 | 2 | 0 |
| மூஸா தோலா 1-க்கு | 35 | 10 | 0 |
| சவரன் மொத்தம் | 22 | 9 | 0 |
| ஷை சில்லரை | 22 | 9 | 6 |
| வெள்ளி 100 ரூ. எடை | 53 | 0 | 0 |
| ஷை சில்லரை | 0 | 8 | 9 |

### லண்டன் மார்க்கெட்

லண்டன் செப். 26உ

ரப்பர் விலை ராத்தல் ஒன்றுக்கு ஏழேமுக்கால் பென்ஸ்

### லண்டன் & லிவர்பூல் ரப்பர் ஸ்டாக்

லண்டன் செப். 26

| | | |
|---|---|---|
| செப்டம்பர் 19உ லண்டன் ரப்பர் ஸ்டாக் | 64,735 | டன் |
| இன்றைய ஸ்டாக் | 63,842 | ” |
| செப்டம்பர் 24உயோடு முடிவான வாரம் டெலிவரி | 1,675 | ” |
| முந்தின வாரம் ஷை | 1,292 | ” |
| லிவர்ப்பூல் இன்றைய ஸ்டாக் | 34,979 | ” |
| முந்தின வாரம் ஷை | 34,722 | ” |
| இந்த வார டெலிவரி | 522 | ” |
| முந்தின வார டெலிவரி | 404 | ” |

## இலங்கையில் ரேடியோப் பிரசங்கம்

(ஒரு நிருபர்)

ஆவினிப்பட்டி விவேகானந்தர் கல்விக் கழகப் பழைய மாணவரும், கொழும்பு தனவைசிய இளைஞர் சங்க உபதலைவரும் கட்டுரையாளருமான திரு எம். ஆர் சேதுராமன் செட்டியாரவர்கள் 5-10-38 புதன்கிழமை மாலை 6 மணிக்கு கொழும்பு ரேடியோ நிலயத்திலிருந்து “தமிழின் பெருமை” என்னும் பொருள் குறித்து ஓர் சொற்பெருக்காற்றுவார். தமிழ்மொழியின் தகைமையையும் ஆற்றலையும் தற்சமய நிலைமையையும் திரு சேதுராமன் செட்டியார் தமது பிரசங்கத்தில் விரிவாக எடுத்துப் பேசுவார்.

## காலி திருநாவுக்கரசு வாசகசாலை

(ஒரு நிருபர்)

20-9-38உ இரவு 9 மணிக்கு திருநாவுக்கரசு வாசகசாலை மண்டபத்தில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீ ஆ. நடராஜன் தலைமைவகித்தார். காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் கமிட்டி உபதலைவரும் ஹரிஜன ஊழியருமான ஸ்ரீ ராம. ப. ராமஸாமி “சுதந்திரம் நமது பிறப்புரிமை” என்னும் விஷயமாக சுமார் 1 மணி நேரம் மிக அழகாகவும் உருக்கமாகவும் உணர்ச்சி ததும்பப் பேசினர். பின்பு தலைவர் முடிவுரையுடன் 10-30 மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியது.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி செப்டம்பர் 24ல் அன்லாரி நகரில் மாலை ஆரம்பமாயிற்று. தேக அசௌக்கியம் காரணமாக சுபாஷ் சந்திரபோஸ் வாராமையால், மௌலானா அபுல்கலாம் அஸாத் தலைமை வகித்தார்.

டாக்டர் காரேயீது காரியக்கமிட்டியார் எடுத்துக் கொண்டிருந்த நடவடிக்கையை காங்கிரஸ் கமிட்டி ஊர்ஜிதம் செய்தது.

காரியக் கமிட்டியார் சமஷ்டி சம்பந்தமாக நிறைவேற்றியுள்ள தீர்மானம் பின் ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. தீர்மானம் வருமாறு:—

ஹரிபுரா காங்கிரஸில் சமஷ்டி சம்பந்தமாக நிறைவேறிய தீர்மானத்தை ஊர்ஜிதம் செய்கிறது. பொதுஜன அபிப்பிராயத்துக்கு விரோதமாக காங்கிரஸ் சமஷ்டியை அங்கீகரிக்குமென்று பிரிட்டிஷ் கவர்ன்மெண்டு நம்பிக்கை கொள்வது கூடா

# அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி

## நிறைவேறிய தீர்மானங்கள்

தென்று எச்சரிக்கை செய்வதாயும், பொறுப்பற்ற மத்ய கவர்ன்மெண்டை இன்னும் நீடிக்கச் செய்வது கூடாதென்றும், இனியும் நீடிக்கச் செய்தால் நெருக்கடி ஏற்படக்கூடுமென்றும் அந்த நெருக்கடியைக் கூடுமானால் தவிர்க்க எல்லோரும் முயல வேண்டுமென்றும் இக்கமிட்டி அபிப்பிராயப்படுகிறது.

திருத்தங்கள் சில கொண்டுவரப் பட்டன. மந்திரிகள் ராஜினாமாச் செய்வதன் மூலம் நெருக்கடி யுண்டுபண்ண வேண்டுமென்று ஒரு திருத்தம் கொண்டுவரப்பட்டது. முடிவில் எல்லாத் திருத்தங்களும் தோற்று அசல்தீர்மானம் நிறைவேறியது.

பின் காரியக்கமிட்டியார் சமஸ்தானங்கள் சம்பந்தமாக நிறைவேற்றியுள்ள தீர்மானம் பிரேரேபிக்கப்பட்டது. அது வருமாறு:—

திருவாங்கூரில் நடைபெறும் அடக்கு முறையைக்கண்டு இக் கமிட்டி வருத்தமும், கலக்கமும் அடைகிறது. திருவாங்கூர் சர்க்காருக்கு காரியக்கமிட்டி அடியிற்கண்ட யோசனையைச் சிபார்சுசெய்கிறது; சட்ட ரீதியான முறையில் பொறுப்பாட்சியைப்பெற கிளர்ச்சிசெய்ய காங்கிரஸுக்கு உரிமையளித்தல்; சமீபத்தில் நிகழ்ந்த சம்பவங்களை பாரபட்சமற்ற முறையில் விசாரிக்க சமஸ்தான காங்கிரஸ் பிரதிநிதிகளும் வேறு பலரும் அடங்கிய கமிட்டியை நியமித்தல்; கைதிகளுக்குப் பொது மன்னிப்பு அளித்தல். இதற்கும் பல திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. எல்லாம் தோற்று முடிவில் அசல் தீர்மான்ம் நிறைவேறியது.

செப்டம்பர் 26ல் காங்கிரஸ் கமிட்டி சுபாஷ் சந்திரபோஸ் தலைமையில் நடைபெற்றது. பர்மாக் கலகத்தால் நஷ்டமடைந்த இந்தியருக்கு அனுதாபந் தெரிவிப்பதாயும் கலகத்தில் சேராது நஷ்டமடைந்தவர்களுக்கு நஷ்ட ஈடுசெய்ய வேண்டுமென்று தலைவர் கொண்டுவந்த தீர்மானம் ஏக மனதாக நிறைவேறியது.

யுத்தம் ஆரம்பித்தால், அவ்வப்போது ஏற்படும் நிலைமைக்கேற்ப நடவடிக்கை எடுத்துக்கொள்ள அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு அதிகாரம் கொடுக்கிறது என்ற தீர்மானமும் ஏகமனதாக நிறைவேறியது. காங்கிரஸ் வாதிகள் உள்பட ஜனங்கள், பலாத்காரத்தைப் பரப்பும் இயக்கத்தை நடத்துவதும், பலாத்காரத்திலும் பொய்பிரசாரத்திலும் இறங்கும்படி தூண்டுவதும் பிரஜா உரிமையாகாது என்ற தீர்மானத்தின் மீது கடுமையான விவாதம் நடந்தது. பல திருத்தங்கள் வந்தன. அபேத வாதிகள் தீவிரவாதிகள்உள்பட 50பேர் வெளியேறினர். சிறு மாறுதலுடன் அசல் தீர்மானம் நிறைவேறியது.







# நோட்டீஸ்

## தேவகோட்டை சப் கோர்ட்டு

1938ஹு O. S. No. 64.

விசாலாக்ஷி ஆச்சி — வாதி.

தேவகோட்டையில் இருக்கும் பள. செ. கரு லெக்ஷுமணன் செட்டியார் — (1), பள. செ. கரு. இராமநாதன் செட்டியார் — (3) } 1. 3 பிரதி வாதிகள்.

1, 3 பிரதிவாதிகளுக்கு நோட்டீஸ்:—

ஷை நம்பரில் வாதிக்கு 1-ம் பிரதிவாதி 5-5-34-ல் ரூ. 5076–15–0 க்கு எழுதிக் கொடுத்திருக்கும் டிபாசிட்டு வவுச்சரின்படி செல்ல வேண்டிய தொகை ரூபாய் 5874—1—6 க்கு பிரதிவாதிகள் பேரில் வியாஜ்ஜியம் போட்டு 11—10—1938-ந் தேதி வாய்தாப் போட்டு ஷை தேதிக்கு Substituted Service சமன்ஸ் ஆர்டராகியிருப்பதால் ஷை தேதி பகல் 10 மணிக்கு சமூகம் கோர்ட்டில் ஆஜராகி ஆக்ஷேபனைகளை தெரிவித்துக் கொள்ள வேண்டியது.

L. Venkatarama Iyer,

14—9—1938 தேவகோட்டை } வாதி வக்கீல்.

# :: பல திரட்டு ::

சென்னை மாகாணத்தில் 40,000 சுதேச வைத்தியர்கள் இருக்கிறார்கள்.

★

ஒரு நபருடைய மலத்தின் எரு விலை வருஷத்துக்கு ரூ. 4 ஆகிறது.

★

சாதாரணமாக ஒரே பிரசவத்தில் 5 குழந்தைகளைப் பெறுவது மிகவும் அபூர்வமாகும். ரஸாயன சாஸ்திரப்படி 50,000,000 பிரசவங்களுக்கு ஒரு முறை இப்படி நேருமென்று ஆராய்ச்சியாளர் கண்டுள்ளனர்.

★

நாஹானில் உள்ள கார்ஹ என்ற இடத்தைச் சேர்ந்த வாலிபர்கள் நிர்வாண சங்கம் ஒன்றை ஆரம்பித்திருக்கின்றனர். "மனுஷ வர்க்கத்தைத் தின்று வரும் ஒழுக்க முறைகளைத் தொலைக்க" இந்தக் கூட்டம் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறதாம். ஆற்றங் கரையருகில் பர்ணசாலை அமைத்து வாழ்வார்களாம்.

★

இந்தியாவில் சுமார் 2,500,000 ஜாதிப்பூச்சிகள் இருக்கின்றனவென்று ஆசிரியர் மகம்மது அஸ்பால் உசேன் கூறுகிறார். இவற்றில் 40,000 ஜாதிகளைக் குறித்தே, அதாவது அறுபதில் ஒரு வீதத்தைக் குறித்தே இதுவரை ஆராய்ச்சி செய்யப்பட்டிருக்கிறது. இந்தப் பூச்சிகள் ஒவ்வொரு வருஷமும் ஏறக்குறைய 200 கோடி பெறுமான பொருட்சேதத்தை விளைவிக்கின்றனவென்றும் 15லக்ஷம் மனித உயிர்களைக் கொல்லுகின்றனவென்றும் மதிப்பிடப்பட்டிருக்கிறது.

1936-ம் வருஷத்தில் சென்னை மாகாணத்தில் 1364 வைத்தியசாலைகளே இருந்தன. அவ்வருடத்தில் கவர்மெண்டார் வைத்திய இலாகாவுக்காக 76 லட்சம் ரூபாய் செலவு செய்திருக்கிறார்கள். இந்தத் தொகையில் வைத்தியர்கள், தாதிகள், ஊழியர்கள், இவர்கள் வகையில் 38,60,359 ரூபாய்கள் செலவிடப்பட்டிருக்கிறது. பாக்கித் தொகையில் சுமார் 26 லட்சம் ரூபாயே ஔஷதங்கள், பிணியாளிகளின் ஆகாரச்செலவு இந்த வகைக்காகச் செலவிடப்பட்டிருக்கின்றது. மீதத் தொகையை புதிய கட்டிடங்களுக்கும், பழையகட்டிடங்களைப் பழுது பார்க்கவும் செலவு செய்திருக்கிறார்கள்.

★

ஜெர்மனியின் சில பாகங்களிலே வாதரோகத்திற்கு எறும்பு ஸ்நானம் எனப்படும் ஒரு புது வைத்தியம் ஏற்பட்டிருக்கிறது. ஒரு சாக்கிலே ஒரு எறும்புக்கூட்டத்தைப் பிடித்துப் போட்டு அந்த சாக்கை வெந்நீர் நிறைந்த ஒரு தொட்டியினுள் அமிழ்த்தி வைத்தால் சாக்கிலிருந்து வெந்நீருக்குள் பார்மிக் ஆஸிட் (Formic Acid) என்ற புளிப்புசத்துசென்று தண்ணீரில் கலக்கிறது. இந்தப் புளிப்புச் சத்தில் தோலுக்கு எரிச்சலை உண்டுபண்ணக்கூடிய தன்மை யிருக்கிறது. எரிச்சலினால் சம்பந்தப்பட்ட பாகத்திற்கு இரத்தம் விரைந்து வரவும் அதனால் நிவர்த்தி ஏற்படவும் செய்கிறதாம். இந்த சிகிச்சை முறை இப்பொழுது பலவிடங்களிலும் பரவி வருகிறதாம்.

# நோட்டீஸ்.

## சிவகெங்கை சப் கோர்ட்டு

S. C. No. 231 of 36.

E. A. No. 159 of 38.

காளையப்பக் கோனார் } வாதி (மரணம்)

ப. செல்லையாக் கோன் } 1-ம் பிரதிவாதி

வாதி 12-6-38உயில் காலஞ் சென்றுவிட்டபடியால் ஷையாரின் 1-வது சம்சாரம் காளியம்மை, 2-வது சம்சாரம் சங்குபிள்ளை 1-வது சம்ஸாரத்தின் மகன் மைனர் காத்தமுத்து, 2-வது சம்சாரத்தின் மகன் மைனர் ராமன் இந்த 4 பேர்களையும் வாதிக்கு வார்சுகளாக சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று ஷை வார்சுகளால் மனு தாக்கல் செய்யப்பட்டு ஷை மனுவும் 6-10-38உ வாய்தா ஏற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபனையுண்டானால் அன்று பகல் 10 மணிக்கு கோர்ட்டில் தெரியப்படுத்திக்கொள்ளவும். தவறினால் எக்ஸ்பார்ட்டியாக பைசல் செய்யப்படும்.

சிவகெங்கை, 27—9—38. } P. சங்கரய்யர், வக்கீல்.

### பஸ் ஸ்டாண்டு

திருப்பத்தூர் பஸ் ஸ்டாண்டில், பிரயாணிகளுடைய வசதியை முன்னிட்டு ஸ்பெஷல் ஆபீஸரது முயற்சியால், ஒரு கொட்டகை அமைக்கப்பட்டிருக்கிறது.

## ராஜா ராம்மோகனர் விழா

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

பற்றி அவர் கூறும்போது, கல்யாணம் அல்லது விபசாரம் இரண்டுதான் பெண்களின் உயிர் வாழ்விற்கு இடமளிக்கிறது. இரண்டிலொன்றுக்கு உடன்படாவிட்டால் தூக்குப்போட்டுக்கொள்ள வேண்டியதுதான் என்று குறிப்பிட்டார். அந்த நிலைதான் இன்று மிருக்கிறது. விதவைகட்குக் கல்யாணம் செய்வதில் கஷ்டமில்லை. ஆனால் சீதனப் பணம், புருஷன் பணம் இவைகளைச் சாப்பிட சுற்றத்தார் விரும்பி விதவைப் பெண்களைக் கழுவில் இருத்தி வருகின்றனர். பணமும் சுயநலமுமே இன்று விதவைகளை மடக்கிக்கொண்டிருக்கின்றன. ராம் மோகனரை வைதீகர் 1000 கணக்காகக் கூடியெதிர்த்தனர். காவலுடனும் கைத்துப்பாக்கியுடனும் அவர் வெளி வரவேண்டியதாயிற்று. இன்று அப்படியில்லை. பெருமுயற்சியும் உதவியுமிருந்தால் காலக்கிரமத்தில் வெற்றி கிடைக்கும். விதவா விவாக இயக்கத்தை வடநாட்டார் நன்கு அறிந்து ஆதரிக்கின்றனர். லாலா சங்கா ராம் 50 லட்சம் இதற்கு நன்கொடை கொடுத்தார். புனாவில் தாக்கர்சே 15 லட்சம் நன்கொடை கொடுத்தார். அவர் உயிலில் தம் மனைவிக்கு இத்தனை லட்சம் கொடுக்கவேண்டியது என்றும், அவள் மறுபடி விவாகம் செய்துகொண்டால் அதைப்போல் மற்றொரு பங்கு பணம் நன்கொடை கொடுக்கவேண்டுமென்றும் குறிப்பிட்டதாகச் சொல்லப்படுகிறது. இவைகளை எண்ணிப் பாருங்கள்.

**தலைவர் முடிவுரை**

வாய்ச்சொல்லை விட மனமார ஈடுபட வேண்டும். சதியை அவர் ஒழித்து விட்டார். இனி அது வரமாட்டாது. ஆனால் அதிலிருந்து விளைந்த விதவைத் துயரத்தைப் போக்கவே இனி முயற்சி செய்ய வேண்டும். அது பெரிதாகி விட்டது. உண்மையோடு முயன்றால், அது முடியக் கூடாததன்று. ராம் மோகனர் ஹிந்து சாஸ்திரங்களில் மட்டுமல்ல பைபிளிலும் அவர் நிபுணர் பாதிரிகளே அவரைப் பாராட்டிக் கூறியிருக்கின்றனர். விதவா விவாகம் அங்கு மிங்குமாக இரண்டொன்று தான் நடக்கிறது. அவமானத்துக்குத் தான் பயப்படுகிறார்கள். உள்ளூர வேலைசெய்ய வேண்டும். இந்த விழாவின் பயனாக அடுத்த ஆண்டுக்குள் 10 கல்யாணமாவது நடக்க வேண்டும். இல்லாவிட்டால் விழா நடத்துவதால் பிரயோஜனமில்லை. நீங்கள் யாவரும் முயற்சி செய்யுங்கள். நடப்பது நிச்சயம். பின்னர் திரு. முருகப்பா யாவருக்கும் வந்தன மளித்தார். கூட்டம் 8 மணிக்கு நிறைவேறியது.



## உள்நாட்டுச் செய்திகள்

### ஆவினிப்பட்டி

(ஒரு நிருபர்)

விவேகானந்தர் கல்விக் கழகத்தின் மாதக் கூட்டம் வேகுப்பட்டி ஸ்ரீ சிவகாம சுந்தரி செந்தமிழ்ப் பாடசாலை தமிழாசிரியர் திரு. M. சுப்பிரமணிய தேசிகரவர்கள் தலைமையில் நிகழ்ந்தது. ஸ்ரீ தேசிகரவர்கள் கல்வியின் பெருமையைப்பற்றித் தக்க மேற்கோள்களுடன் பேசினர். மாணவர்கள் தங்கள் உரையாடல்களினால் சபையினரை மகிழ்வித்தனர். கழகத் தலைமையாசிரியர் ஸ்ரீ S. கோபால கிருஷ்ணன் 'பாப்பா பாட்டு' என்னும் விஷயமாய் ஓர் சொற்பொழி வாற்றினர். தலைவர் கருத்துரை புகன்ற பின்னர் வாழிய செந்தமிழ் வந்தேமாதரத்துடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

### திருப்பத்தூர் கிராமக்காங்கிரஸ்

(நமது நிருபர்)

இச் சபையின் சார்பில் ஸெப்டம்பர் 24உ மாலை 7 மணிக்கு டாக்டர் பீட்டர் ஆஸ்பத்திரிக்கு முன்னதாக ஒரு பொதுக் கூட்டம் ஸ்ரீ சுப்பையாபிள்ளை தலைமையில் நடைபெற்றது. ஜில்லாபோர்டு மெம்பரும், ஜில்லாக் காங்கிரஸ்கமிட்டிக் காரியதரிசியுமான ஸ்ரீ கரு. முத்து சிவலிங்கம் அவர்கள், காங்கிரஸ்கட்சிப் பிரதிநிதிகளாக திருப்பத்தூர் பஞ்சாயத்து போர்டில் இருந்து உழைத்த மாஜி காங்கிரஸ் அங்கத்தினர்கள் செய்த சேவையையும், ஸ்பெஷல் ஆபீஸருடன் ஒத்துழைக்க வேண்டியதன் அவசியத்தையும், முஸ்லிம்கள் காங்கிரஸுடன்சேர்ந்து உழைக்கவேண்டு மென்றும் குறிப்பிட்டார்.

### நன்கொடை

(நமது நிருபர்)

திருப்பத்தூர் யங்மென்ஸ் புட்பால் அஸோஸியேஷனுக்கு வட இராமநாதபுரம் ஜில்லாபோர்டு ரிக்ரியேஷன் கிளப் 15 ரூ. நன்கொடை வழங்கியிருக்கிறது.

### பொதுக்கூட்டம்

(நமது நிருபர்)

20-9-38ல் திருப்பத்தூர் இடையர் தெருவில் காங்கிரஸ் பொதுக் கூட்டமொன்று நடைபெற்றது. திரு. அய்யாவு அம்பலம் தலைமை வகித்தார். திரு. கிட்டு வய்யரும் திரு. பைரவநாத்தினமும் காங்கிரஸும் பொதுமக்களும் என்ற விஷயங் குறித்துப் பேசினர்கள்.

### உ. சிறுவயல் பெற்றோர் சங்கம்.

இச் சங்கத்தின் கூட்டம் 23-9-38உ மாலை 5-மணிக்கு R. M. P. பெரியணன் செட்டியாரவர்களின் தலைமையின் கீழ் இராமநாதபுரம் ஜில்லா போர்டு பாடசாலையில் நடைபெற்றது. ஸ்ரீமான்கள் எம். எஸ். ஏ. எஸ். அழகப்பசெட்டியார் தலைவராகவும், எஸ். பி. ஏ. பழனியப்ப செட்டியார் உபதலைவராகவும், ஏ எல். ஏ. எல். லெக்ஷ்மணன் செட்டியார் காரியதரிசியாகவும், ஜெ. சீனிவாச அய்யங்கார் உபதலைவராகவும் ஆர் எம். எஸ். எல். வி. லெக்ஷுமணன் செட்டியார் நூல்நிலையாளராகவும் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### கிராமச்சண்டையின் விளைவு

#### நான்கு பேர்களுக்கு அபராதம்

(நமது நிருபர்)

சிவகங்கை தாலூகா ஊாதரி கிராமத்திலுள்ள பெரியசாமி அம்பலத்தையும் ஷை யார் மைத்துனர் கருப்பணன் அம்பலத்தையும் ஷையூர் வீரன் அம்பலமும் மற்ற மூவரும் சேர்ந்து சிலமாதத்திற்கு முன் குத்தி படுகாயப் படுத்தினதிற்காக தேவகோட்டை ஜாயிண்டு மாஜிஸ்டிரேட் கனம் M. S. சிவராமன் I. C. S., 22-9-38உ வெளியிட்ட தீர்ப்பின் பிரகாரம் 4 நபர்களுக்கும் முறையே ரூ. 45 ரூ 45, ரூ 50, ரூ 15, அபராதம் விதித்திருக்கிறார்.

சிவகங்கைதாலூகா காஞ்ஜிரங் காடு கிராமத்தில் மருதுசேர்வை என்பவர் ஆறுமுகம் சேர்வையைக்குத்தி பலத்த காயப்படுத்தியதற்காக ஷை ஜாயிண்டு மாஜிஸ்டிரேட் அவர்கள் ஷை மருது சேர்வைக்கு 8மீ காலம் சிறைவாசமும், 100ரூ. அபராதமும் விதித்திருக்கிறார்.

### செட்டியார்கள் நலஉரிமைச் சங்கம்

நிகழும் புரட்டாசி மீ 6உ காலை 10 மணிக்கு காரைக்குடி செட்டியார்கள் நலஉரிமைச் சங்கத்தின் நிர்வாக சபைக் கூட்டம் திரு. அள. கரு. அடைக்கப்ப செட்டியாரவர்கள் தலைமையில் கூடியது. கணக்கு வாசித்து ஒப்புக்கொள்ளப் பெற்றது. இவ்வூர் ரயில்வே ஸ்டேஷனில் சிற்றுண்டி சாப்பாடு முதலிய வசதிகள் இல்லாமையால் பிரயாணிகளுக்கு மிகவும் கஷ்டமாக விருப்பதால் இதர ஸ்டேஷன்களில் எஸ். ஐ. ஆர். மானேஜ்மெண்டில் நடத்துவதுபோல் இவ்வூரிலும் நடத்தி வசதியளிக்கும்படி எஸ். ஐ. ஆர். ஏஜண்டுக்கு எழுதுவதென்று தீர்மானிக்கப்பெற்றது. இந்நகர் கல்லுக்கட்டி ஊரணி பல மாதங்களாக இருபுறம் பக்கச் சுவரும் வேலி கம்பிகளும் பிரிக்கப்பட்டிருப்பது பொது ஜனங்களுக்கு ஆபத்தாக இருப்பதால் கூடிய விரைவில் ஒழுங்குபடுத்தும்படி இந்நகர் நகர சபையாரை கேட்டுக்கொள்கிறது என்றும் தீர்மானிக்கப்பெற்றது. இதர நிர்வாக விஷயங்கள் கவனிக்கப்பெற்ற பின்னர் கூட்டம் முடிவுற்றது என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

### புதிய சீப் செக்ரிட்டரி

திருவிதாங்கூர் ஆக்டிங் சீப் செக்ரட்டரியாக இருந்த ஸ்ரீ மாதவன் (ஈழவ வகுப்பினர்) பென்ஷன் பெறுமுன் ரஜாவில் செல்வதை முன்னிட்டு அவருடைய ஸ்தானத்தில் எக்ஸைஸ் கமிஷனர் ஸ்ரீ நீலகண்டய்யர் பிரதம காரியதரிசியாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

### குருடர்கள் போட்டி.

முழுக்குருடரான டாக்டர் வில்லியம் ஆக்சன்ஹாம் என்ற 43 வயதுள்ள ஆங்கிலேயரும், மின்ன சோடேவைச் சேர்ந்த கிளின்டன் ரஸ்ஸல் என்ற மற்றொரு குருடரும் கால்ப் விளையாட்டுப் போட்டியில் உலகப்பரிசுக்கு போட்டி யிடப்போகிறார்களாம்.





## உள்நாட்டுச் செய்திகள்

### ஏரியூர் பெற்றோர் சங்கம்.

(காரியதரிசி)

நிகழும் செப்டம்பர் 22-ந்தேதி வியாழக்கிழமை ஏரியூர் பெற்றோர் சங்கத்தின் கூட்டம் டிப்டி இன்ஸ்பெக்டர் ஸ்ரீ. K. R. ராஜம் B. A. L. T. அவர்களின் தலைமையில் நடந்தது. தலைவர் ஆரம்பக்கல்வியைப் பற்றி விரிவாக எடுத்துரைத்தார். சென்ற மாதக்கூட்டத்தில் நியமித்த சென்ஸஸ் கமிட்டியார்கள் சென்ஸஸ் கணக்கையும் ரிப்போர்ட்டையும் சமர்ப்பித்தார்கள். ஆண் பெண்பாடசாலைகளுக்கு மஹாத்மா காந்தியின் உருவப்படம் இரண்டும், தினசரி தினமணி பத்திரிகை பாடசாலைக்கு சாங்க்ஷன் செய்யவேண்டுமென்றும், ஆண்பாடசாலை கட்டிடம் அஸ்திவாரம் போட்டதோடிருப்பதை போர்டில் ஒப்புக்கொண்டு பூரா கட்டிடத்தையும் கட்டிக் கொடுக்கும்படியும் கனம் டிஸ்டிரிக்ட் போர்டாரவர்களை கேட்டுக்கொள்ளப்படுகிறது என்றும் ஆண், பெண்பாடசாலைகளில் சிறு கைத்தொழில்கள் கற்றுக் கொடுக்கவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

### கொத்தமங்கலம்

#### இருவர் பந்தாடிப் பரிசு பெறும் விளையாட்டு

"பாரதிவிலாஸ்" பந்தடிமாலின் சார்பில் நிகழும் புரட்டாசிமீ நான்காவது வாரத்தில் இருவர் பந்தாடிப் பரிசுபெறும் விளையாட்டு நடைபெறும். ராமநாதபுரம் ஜில்லாவிலும், புதுக்கோட்டை சமஸ்தானத்திலும் உள்ள எந்த வகுப்பினரும் கலந்துகொள்ளலாம். டீம் அனுப்புவர்கள் டீம் ஒன்றுக்கு பிரவேசக்கட்டணம் ரூபாய் ஒன்றுடன் புரட்டாசிமீ 19உக்குள் (5-10-38) காரியதரிசிக்கு அனுப்பிவிடவேண்டும். புரட்டாசிமீ 22உ (8-10-38) மாலை 5-மணிக்கு பாலெட் பிரிக்கப்படும் என்று காரியதரிசி திரு. அரு. ராமநாதன் அறிவிக்கிறார்.

### தேவகோட்டை இளைஞர் சங்கம்

நமது சங்க அங்கத்தினரான ஸ்ரீ நா. நடேசன் மலாய்நாடு செல்வதை முன்னிட்டு 11-9-38 மாலை 4 மணிக்கு காரியதரிசி இல்லத்தில் தேநீர் விருந்தொன்று சிறந்த முறையில் அளிக்கப்பெற்றது. பின்னர் செ. பிச. பிச்சப்பா அவர்கள் தலைமையில் கூட்டம் ஆரம்பமாயிற்று. விருந்தினரைப் பாராட்டி அன்பர் பலர் பேசினர்கள், விருந்தினர் பதிலளித்ததும் வந்தேமாதரத்துடன் கூட்டம் 6 மணிக்கு முடிவுற்றது.

### ஸ்ரீ சௌந்தரநாயகி கிளப் மாகாண டோர்ணமெண்டு

பட்டமங்கலத்தில் அக்டோபர் மீ இரண்டாவது வாரத்தில் காரம்போர்டு டபிள்ஸ் டோர்ணமெண்டும், நான்காவது வாரத்தில் ஓட்டமும் தாவுதலும் (Long Jump) டோர்ணமெண்டும் நடைபெறும். டீம் அனுப்புகிறவர்கள் அக்டோபர் மீ 2உ க்குள் மனுசகிதம் பிரவேசக்கட்டணத்துடன் காரியதரிசிக்கு அனுப்பவேண்டியது. டோர்ணமெண்டு பிரவேசக்கட்டண விகிதம்:— காரம்போர்டு ரூ. ஒன்றும், ஓட்டம், தாவுதல் இரண்டுக்கும் அணா ஆறு என்றும் காரியதரிசி அறிவிக்கிறார்.

### சிவகெங்கை தாலுகா காங்கிரஸ் கமிட்டி.

(காரியதரிசி)

ஷை கமிட்டியின் கூட்டமொன்று 18-9-38 ஞாயிற்றுக்கிழமை மாலை 4-மணிக்கு மதகுபட்டி பொன் விழா மாளிகையில் ஸ்ரீ. சித. வயி. வயிரவன் செட்டியார் தலைமையில் கூடி சில தீர்மானங்களை நிறைவேற்றிற்று.

### காங்கிரஸ் பிரசாரம்

18-9-38 தேதி மாலை 6-மணிக்கு நேரு சதுக்கத்தில் சரஸ்வதி வித்தியாசாலை தலைமை ஆசிரியர் சுப்பய்யர் அவர்கள். தலைமையில் காங்கிரஸ் பிரசாரகர் ஸ்ரீ கிட்டுவய்யர் குன்னக்குடி ஸ்ரீ. கிருஷ்ண பிள்ளை ஆகியவர்களால் மந்திரி சபை இது வரை செய்த நன்மைகளைப்பற்றியும், எல்லோரும் காங்கிரசை ஆதரித்து இம்மாதத்திற்குள் காங்கிரஸ் அங்கத்தினர்களாக அவசியம் சேரவேண்டுமென்றும், பேசப்பட்டது.

### தேவகோட்டை நகரக் காங்கிரஸ் கமிட்டி

(காரிய தரிசி)

26-9-38 சித. மு. மாரியப்பா அவர்கள் தலைமையில் காங்கிரஸ் ஆபீஸில் அவசரக் கூட்டம் கூடியது. அக்டோபர் 2உ மகாத்மா காந்தியடிகளின் 70 வது பிறந்ததின கொண்டாட்டம் அதிக விமரிசையாக கொண்டாடுவதென்று அதன் செலவுக்கு ரூ. 50 சாங்க்ஷன் செய்யப்பட்டது. அன்று மாலை 5 மணிக்கு காங்கிரஸ் ஆபீஸில் ஸ்ரீ சசிவர்ணதேவர் திருஉருவப் படத்தை புஷ்பவிமானத்தில் அலங்கரிக்கப் பட்டு மேளவாத்தியங்களோடு ஊர்வலம் முக்கிய வீதி வழியாக காந்தி சதுக்கம் வந்து சேர்ந்ததும் பசும்பொன் ஸ்ரீ உ. முத்து ராமலிங்கத்தேவர் எம். எல். ஏ. அவர்கள் கொடியேற்றிவைப்பார்கள். சங்கரன்கோவில் ஸ்ரீ என். சோமயாஜுலு அவர்களும் ஸ்ரீமதி பங்கஜத்தம்மாள் அவர்களும் காரைக்குடி ஸ்ரீ என். எஸ். கணபதி அவர்களும் இன்னும் சில தேச பக்தர்களும் சொற்பொழிவு ஆற்றுவார்கள்.

### முகிழ்தகம் கிராமகாங்கிரஸ் கமிட்டி

20-9-38 மாலை 6மணிக்கு ஜில்லாகாங்கிரஸ் கமிட்டிப் பிரசாரகர்கள் ஸ்ரீ. வி. பரமசிவன், ஸ்ரீ. அ. மாணிக்கம் ஆகியோர் இவ்வூருக்கு விஜயஞ்செய்து கிராமகாங்கிரஸ் கமிட்டியை அமைத்தார்கள். ஸ்ரீ. இ. முத்துவயிருஅம்பலம் தலைவராகவும், ஸ்ரீ. ராம. பொன்னப்பாதேவர் காரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள் என்று உபதலைவர் அறிவிக்கிறார்.

### திருமண நன்கொடை

தோழர் வெ. அ. சித. நடராஜன்-அலர்மேலுமங்கைத் திருமணத்தை முன்னிட்டு ஓ. சிறுவயல் மாணவர் சங்கத்திற்கு ரூ. 5-0-0 நன்கொடை அளித்துள்ளார்கள் என்று காரியதரிசி தெரிவிக்கிறார்.

### காளையார் கோவில் கிராம விளையாட்டுச் சங்கம்

(காரியதரிசி)

சென்னை மாகாணப் பிரதம மந்திரியவர்கள் உத்திரவுப்படிக்கு காளையார் கோவிலில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் கிராம விளையாட்டுச் சங்கம் மெம்பர்களும் வெத்தியூர் R. J. F. C. கிளப் பந்தடிமால் விளையாட்டு மெம்பர்களும் கலந்து 25-9-38உ மாலை 5 மணிக்குமேல் முக்கால்மணி நேரத்துக்கு சிநேகிதமுறையில் match ஒன்று நடத்தியதில் காளையார் கோவில் கிராமவிளையாட்டுச் சங்கத்தார் வெத்தியூர் மெம்பர்கள் பேரில் இரண்டு கோல் போட்டு ஜெயித்தார்கள்.

### சிவகெங்கையில் நவராத்திரி.

(நமது நிருபர்)

நவராத்திரிவிழா 24-9-38உ ஆரம்பித்து அதிவிமரிசையாய் நடைபெற்று வருகிறது. அதில் 29-9-38உ காலை 11-மணிக்கு ஏழைகளுக்கு அன்னமிடுதல்; மாலை 4-15 மணிக்கு டென்னிஸ்பந்து முடிவுப்போட்டி; 1-10-38உ பகல் 11-மணிக்கு சென்னை பச்சையப்பா காலேஜ் கிரிக்கெட் ஆட்டம்; மாலை 5-30 மணிக்கு தேனீர் விருந்து; 6-30 மணிக்கு பரிசுவழங்கல்; 11-மணிக்கு வாணவேடிக்கை; 2-10-38உ 11-மணிக்கு தேவகோட்டை கிரிக்கெட் ஆட்டம்; 3-10-38 தேதி மாலை 5-30 மணிக்கு நகர் வலம், 6-மணிக்கு தர்பார் முதலியவை நடைபெறும்.

### கீழப்பூங்குடி

(காரியதரிசி)

23—9—38 இவ்வூர் காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டிக்கூட்டம் வாசகசாலையில் தலைவர் ஷண்முக அம்பலகாரர் தலைமையில் நடைபெற்றது. மத்திய அசம்பிளியில் நிறைவேறிய யுத்த எதிர்ப்பு மசோதாவைக்கண்டித்தும் தேசமெங்கும் யுத்த எதிர்ப்பு பிரசாரத்தை தீவிரமாய் நடத்த வேண்டுமென்றும் பர்மாவில் இந்தியர்களுக்கு ஏற்பட்ட நஷ்டத்திற்கு பர்மா சர்க்கார் நஷ்டயீடு கொடுக்கவேண்டுமென்றும் அய்யலூர் ரயில் விபத்தில் உயிரிழந்த மக்களுக்கு அனுதாபம் தெரிவித்தும் திருவாங்கூரில் நடக்கும் அடக்குமுறையைக் கண்டித்தும் சமஸ்தானக் காங்கிரஸ் சட்டமறுப்பை ஆதரித்தும் இந்தியாவிலுள்ள எல்லா சமஸ்தான குடிகளும் அந்தந்த இடத்தில் வரிகொடா இயக்கம் ஆரம்பிக்க வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### சிவகெங்கை தாலுகாவில் காங்கிரஸ் பிரசாரம்

7-9-38உ முதல் 11-9-38உ வரை காரைக்குடி ஜில்லாக் காங்கிரஸ் பிரசாரகர்கள், ஸ்ரீமான்கள் வி. பரமசிவம், கா. வெ. சேதுராமச்சந்திரன் முதலியவர்கள், காளையார் கோவில், பளுவூர், மங்கலம் கீழச்சேத்தூர் முதலிய ஊர்களில் பொதுக்கூட்டம் நடத்தி பிரசங்கங்கள் செய்து, பளுவூர் கிராமத்தில் ஸ்ரீமான் முத்துருக்கு பிள்ளையவர்களை தலைவராகக் கொண்ட 11 பேர்களடங்கிய கிராமக் காங்கிரஸ் சபை ஒன்று ஏற்படுத்தி யிருக்கிறார்கள். 14-9-38உ முதல் 25-9-38உ வரை காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் கமிட்டி பிரசாரகர் கா. வெ. சேதுராமச் சந்திரனால், திருமாஞ்சோலை, பாப்பாகுடி, அரசனூர், சக்கந்தி, கண்டாங்கிபட்டி, தமறுக்கி, முடிகண்டம் பில்லூர், முதலிய ஊர்களில் புதிதாக மெம்பர்கள் சேர்த்தும் தமறுக்கியில் ஸ்ரீமான் சோலைமலை யம்பலம் தலைமையில் ஓர் பொதுக் கூட்டம் நடத்தியும், முடிகண்டத்திலும் பில்லூரிலும் பிரசங்கம் செய்தும் அங்கத்தினர் சேர்த்தும் இரண்டு தனித்தனி கிராமக் காங்கிரஸ் சபைகள் நிறுவப்பட்டிருக்கின்றன.

# வட இராமநாதபுரம் ஜில்லா போர்டுக் கூட்டம்

## திருவாங்கூர் அடக்குமுறை கண்டிக்கப்பட்டது

(நமது நிருபர்)

வட இராமநாதபுரம் ஜில்லா போர்டின் சாதாரணக் கூட்டமொன்று 24-9-38உ யன்று பிற்பகல் 3-மணிக்கு திருப்பத்தூரி லுள்ள மேற்படி காரியாலயக் கட்டிடத்தில் கூடியது. பதின் மூன்று அங்கத்தினர்கள் வந்திருந்தார்கள். பிரஸிடெண்டு ஸ்ரீ க. வெ. சித. வெ. வெங்கடாஜலம் செட்டியார் தலைமை வகித்தார். சென்ற மாதத்தைப் போன்றே கூட்டத்தை "நாட்டு வழக்கப்படி இருந்து" நடத்தினர். ஆரம்பத்தில் ஸ்ரீ கருமுத்து சிவலிங்கத்தின் கேள்விகளுக்கு பதில்கள் அளிக்கப் பட்டன.

**திருவாங்கூர் அடக்குமுறை**

"திருவாங்கூர் சமஸ்தானத்தில் நடக்கும் சர்க்கார் அடக்குமுறையை இந்தப் போர்டு கண்டிப்பதுடன் அடக்குமுறையை உடனே நிறுத்தவேண்டுமென்று சமஸ்தான சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறது; சமஸ்தான காங்கிரசின் கோரிக்கைகளை இந்த போர்டு ஆதரிக்கிறது" என்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

**புதிய பெண்பாடசாலை**

சிவகெங்கை தாலூகா பெரிய கோட்டை கிராமத்தில் ஒரு பெண் பள்ளிக் கூடம் ஏற்படுத்துவதெனத் தீர்மானிக்கப் பட்டது.

**ஆண்பாடசாலை**

கம்பனூர் கிராமத்தில் ஒரு ஆண்பாடசாலை திறக்க தீர்மானிக்கப் பெற்றது.

ஏரியூரில் ஸ்ரீ சொக்கலிங்கம் அம்பலகாரர் கட்ட ஆரம்பத்திருக்கும் பள்ளிக்கூடக் கட்டிடத்தை ஜில்லா போர்டில் எடுத்து பூர்த்தி செய்து கொள்வதென தீர்மானிக்கப்பட்டது.

**ரோட்டுக்கு நன்கொடை**

ஆவினிப்பட்டி எல்லையிலிருந்து கீழச் செவல்பட்டி பஞ்சாயத்து ஏரியா வரை ஏற்கனவே இருக்கிற ரோடை அக்வயர் செய்து போர்டில் பராமரிப்பதற்கு ஷையூர் நகரத்தார்களிடமிருந்து ரூ 1000 வந்தனத்துடன் ஒப்புக் கொள்ளப்பட்டது.

மகிபாலன்பட்டியிலிருந்து கண்டவராயன் பட்டிவரை ஏற்கனவே போட்டிருக்கும் பிரைவேட் ரோட்டை போர்டில் எடுத்துக் கொண்டு பராமரிப்பதெனத் தீர்மானிக்கப்பட்டது.

**தோட்டிகள் நியமனம்**

ஆவினிப்பட்டி கிராமத்திற்கு இரண்டு தோட்டிகள் நியமிக்கத் தீர்மானிக்கப் பட்டது.

**சுற்றுகிற வாசகசாலை**

கிராமங்கள் தோறும் கல்வி யபிவிருத்தியடைய சுற்றுகிற வாசகசாலை, ரேடியோ செட், கிராமபோன் மாஜிக்லாண்டர்ன், ஆகியவைகள் மூலம் பிரசாரம் செய்ய வேண்டுமென்றுவந்த தீர்மானம், பலமாதங்களாக ஒத்திவைக்கப்பட்டுக்கொண்டே வந்து இக் கூட்டத்தில் தேவையில்லையெனத் தீர்மானிக்கப்பட்டு விட்டது.

**புதிய பாலம்**

திருக்கோஷ்டியூர்புதூருக்கும் கக்காட்டியிருப்புக்கும் இடையில் ஒரு பாலம் கட்டத் தீர்மானிக்கப்பட்டது.

**குஷ்டரோக நிவாரண உதவி**

ஜில்லா குஷ்டரோக நிவாரண உதவித் தொகைக்கு 1937,38 க்கும் 1938,39க்கும் வருடமொன்றுக்கு ரூ. 250 வீதம்கொடுப்பதெனத் தீர்மானிக்கப்பெற்றது.

**அவசரக்கூட்டம்**

3-30 மணிக்கு நடைபெற்ற அவசர மீட்டிங்கில் கீழ்க்கண்ட விஷயம் கவனிக்கப் பட்டது:—

**நெய்குப்பையில் தொழில் வரி**

நெய்குப்பை பஞ்சாயத்து எல்லையில் 1-10-38உ முதல் தொழில்வரி விதிப்பதற்கு ஜில்லா போர்டு அனுமதிபெற்று அதை கெஜட்டில் பிரசுரம் செய்யும்படி வரலான கவர்ன்மெண்ட் மெமோராண்டம் யோசிக்கப்பட்டது. தொழில் வரி விதிக்க சாங்கிஷன் செய்யப்பட்டது. டாக்டர் சுபபிரமண்யம் ஆக்ஷேபித்தார்.

**லேடி டாக்டர்**

திருப்பத்தூர் லோகல் பண்டு டிஸ்பென்சரியிலும், காளையார்கோவில், திருப்புவனம், நாட்டரசன்கோட்டை, திருவாடானை ஆகிய ஊர்களிலும் லேடி டாக்டர்களை நியமிப்பதெனவும் கானூரில் ஒரு மருத்துவச்சியும், உப்பூரில் ஒரு மருத்துவச்சியும் நியமிப்பதெனவும் தீர்மானிக்கப் பட்டது.

**குடி தண்ணீர் வசதி**

திருப்பத்தூர் தாலூகா புளியங்குடிப் பட்டியில் ஒரு கிணறு வெட்டவும், குருநகளிப்பட்டியில் ஒரு கிணறு வெட்டவும் தீர்மானிக்கப்பட்டது.

சிவகங்கைத் தாலூகா மலம்பட்டி கிராமத்திலுள்ள போரிங் வைத்த கிணற்றை சீர்திருத்தம் செய்வதெனவும், பெரிய கோட்டையில் ஒரு கிணறு வெட்டுவதெனவும் பைக்குடிபட்டி கிராமத்தில் ஒரு கிணறு வெட்டவும் தீர்மானிக்கப் பெற்றது.

பிரான்மலையில் தற்போதுள்ள ஆயுர்வேத வைத்தியசாலையை ரெகுலர் அல்லபதிக் டிஸ்பென்சரியாக மாற்றுவதெனவும், செய்குப்பை ரூரல் டிஸ்பென்சரியை ரெகுலர் அல்லபதிக் டிஸ்பென்சரியாக மாற்றுவதெனவும் தீர்மானிக்கப்பட்டது.

**"விடுதலை"யா, "சுதேசமித்திர"னா?**

தற்பொழுது 50 பள்ளிக் கூடங்களுக்கு தினமணி பத்திரிகை அனுப்பி வருவது போதாதென்றும், இன்னும் 100 பத்திரிகைகள், 100 பள்ளிக் கூடங்களுக்கு அனுப்பவேண்டுமென்றும் தீர்மானம் பிரரேபிக்கப்பட்டது.

டாக்டர் சுப்பிரமண்யம், தினமணி 50ம் சுதேசமித்திரன் 50ம் ஆகப்போடவேண்டுமென்றார். ஸ்ரீ கருமுத்து சிவலிங்கம், "சுதேசமித்திரன், ஹிந்தி கட்டாய பாடத்தையும், கடன் நிவாரண மசோதாவையும் எதிர்த்து எழுதுகிறது; அது வேண்டாம்" என்றார். டாக்டர் சுப்பிரமண்யம் "இரண்டையும் பொதுஜனங்கள் அறிந்து கொள்வது நல்லது தானே" என்றார்.

ஸ்ரீ கருமுத்து சிவலிங்கம் "பொது ஜனங்கள் அனைத்தையும் அறிவது நல்லது தான். ஆகவே 'விடுதலை' பத்திரிகையில் 50 போடுங்கள்" என்றார். முடிவில் சுதேசமித்திரன் 50ம், தினமணி 50ம் 100 பள்ளிக்கூடங்களுக்குப் போடுவதெனத் தீர்மானிக்கப் பெற்றது.

இத்துடன் இரவு 7.30 மணிக்குக் கூட்டம் முடிந்தது.





# நோட்டீஸ்.

## தேவகோட்டை டி. மு. கோர்ட்டு

1938-ஹு O. P. No. 52-ல்.

நா. சா. ராம. சா. ராமசாமி செட்டியார் — மனுதார்.

நா. சா. ராம. சா. சாத்தப்ப செட்டியார் — எதிர் மனுதார்

அரியக்குடியில் வசித்து வந்தவரும் மனுதாருக்கு அவிபக்த சகோதாருமான முத்தய்யா செட்டியார் என்பவர் அரியக்குடியில் இறந்து போய் விட்டார் என்றும், ஷை முத்தய்யா செட்டியார் பேரால் ரெங்கூன் வயி. ராம. ப. கடையில் டிபாசிட்டாக இருந்து வருகிற துகையும், ஷை முத்தய்யா செட்டியாரால் 'நியூ இந்தியா லைப் அஷ்யூரன்ஸ்' கம்பெனியில் இன்ஷியூர் செய்யப்பட்டிருக்கிற துகை ரூ. 3000—0—0 மூவாயிரமும், ஷை முத்தய்யா செட்டியார் இறந்து போன மேல், ஷை மனுதாருக்கும், எதிர் மனுதாருக்குமாக கிடைக்க வேண்டியதாக இருக்கிற தென்றும், ஷை இரண்டு வகைத் துகைகளையும் வசூலித்து அடைந்து கொள்ளத்தக்கதாக மனுதார், எதிர் மனுதார் இவர்களிருவர் பேருக்கும் சேர்த்து பாத்திய சர்ட்டிபிகேட்டு கொடுக்க வேணுமாய் கோறி மனுதார் மனுச்செய்து கொண்டிருப்பதில் மேற்படி மனுவுக்கு 24-10-1938உ வாய்தா ஏற்பட்டிருக்கிறது. ஷை மனு விஷயமாய் ஆக்ஷேபனையுள்ளவர்கள் ஷை வாயிதாவில் ஷை கோர்ட்டில் ஆஜராகித் தெரிவித்துக் கொள்ள வேண்டியது.

ஆர். கிருஷ்ணய்யங்கார்,
மனுதார் வக்கீல்

தேவகோட்டை,
21—9—38.

## சாரீரப் பயிற்சி சரீரத்துக்கு உகந்தது

சாரீரப் பயிற்சி பரிசீலனைக்கென்று ஏற்படுத்தப்பட்ட பெர்லின் பரீக்ஷை சாலையில் பயிற்சி செய்யப்பட்ட சாரீரம் சரீரத்திற்கு டானிக்போல் உதவுகிறது என்று கண்டுபிடித்திருக்கின்றனர். புள்ளி விவரங்களிலிருந்து சாரீரப் பயிற்சிபெற்றவர்கள் அப் பயிற்சியில்லாதவரை விட அதிக திடகாத்திரம் பொருந்தியவராயும் சுலபமாய் நோய்வராது தடுத்துக் கொள்ளும் சக்தியுள்ளவர்களாயும் இருப்பதுடன், சங்கீதப்பயிற்சி யுள்ளவர்களைச் சுவாச கோச சம்பந்தமான நோய் அணுகுவதில்லை என்றும் தெரிகிறது. மேலும் தன்தன் உழைப்பின் அளவுக்குத் தக்கபடி, சாரீரப் பயிற்சி எடுத்துக்கொண்டால் ஒவ்வொருவருடைய தேகமும் வலுவடைகின்றதாம்.

# :: சினிமாச் செய்திகள் ::

**இந்திய சினிமா வெள்ளிவிழா**

இந்திய சினிமாவின் வெள்ளிவிழாவை அக்டோபர் 16உ கொண்டாடுவதென முடிவு செய்யப்பட்டிருப்பதாக அறிவிக்கப் படுகிறது.

**சினிமா நட்சத்திரத்துக்குக் கைக்குட்டை**

மெட்ரோ கோல்டுவின் மேயர் நடியான நார்மா ஷேரைப் பாராட்டுவதற்கு அடையாளமாகச் சீனாவிலுள்ள குவாங்டன் மாகாணத்தைச்சேர்ந்த 3 லக்ஷம் பெண்கள் சேர்ந்து ரூ. 300 பெறுமான முள்ள சித்திரவேலைப் பாடுகளுடன் கூடிய ஒரு அழகிய கைக்குட்டையை அனுப்பியிருக்கின்றனர்.

**பகல் வெளிச்சத்தில் சினிமா**

சினிமாக்காட்சிகளை இருட்டறையிலேயே இப்போது காணமுடியும். நல்ல பகல் வெளிச்சத்திலேயே சினிமாக்காட்சிகளைப் பார்க்கத்தக்க திரையொன்றை ஜப்பான் நிபுணர்கள் கண்டுபிடித்து, அதை விற்பனைக்கும் கொண்டுவந்துவிட்டார்கள். இனி சினிமா பார்ப்போர் இருட்டில் இருந்து தவிக்க வேண்டியதில்லை.

**திரையில் கமால்பாக்ஷா**

துருக்கி சமீபகாலத்தில் எவ்வாறு முன்னேறியிருக்கின்றது என்பதை விளக்கும் படமொன்று பிரஞ்சு ஸ்டுடியோவில் பிடிக்கப்பட்டுவருகிறது. இதில் துருக்கி சர்வாதிகாரி கெமால் பாக்ஷா, கெமால் பாக்ஷாவாகவே நடிக்கிறார்.

**சில புள்ளிவிவரங்கள்.**

உலக முழுவதிலும் வாராவாரம் சினிமா பார்க்கச் செல்வோர் தொகை எவ்வளவு தெரியுமா? இருபதுகோடி! உலக ஜனத் தொகையில் பத்தில் ஒருபாகம். ஹாலிவுட்டில்மட்டும் சினிமாவில் 40 கோடி பவுன் போட்டிருக்கிறார்கள். அமெரிக்காவில் சினிமா பார்க்க ஆள் ஒன்றுக்கு சராசரி 11 அணா செலவாகிறதாம்.

**ஸெக்குக்கு இந்தியபடம்.**

பிரபாத் கம்பெனியார் தயாரித்துள்ள எதிர்பாராதது என்ற படத்தை அனுப்பி வைக்கும்படி, ஜெக்கோஸ்லோவேகியா சினிமா பிரமுகர் ஒருவர் அக் கம்பெனிக்கு எழுதியிருக்கிறாராம்.

**பிரபாத்தின் முன்னேற்றம்.**

பிரபாத் கம்பெனியார் தங்கள் ஸ்டுடியோவை பல விதத்திலும் அபிவிருத்தி செய்து வருகின்றனர். ஆங்கிலத்தில் ஒரு படம் தயாரித்து வெளிநாடுகளுக்கு அனுப்பவேண்டும் என்று திட்ட மிட்டிருக்கிறார்கள். அநேகமாக 1940-ல் முதலாவது ஆங்கிலப்படம் வெளிவரக்கூடும்.

**ஸோவியத்தில்**

ஸோவியத் ருஷ்யா, கல்விப்படங்கள் தயாரிப்பதில் மிகவும் முன்னேறி யிருக்கிறது. விஞ்ஞான சம்பந்தமான படங்களும், குழந்தைகளுக்குப் போதனை அளிக்கும் படங்களும் அங்கு ஏராளமாக வருஷந்தோறும் தயாரிக்கப்படுகின்றன. விஞ்ஞானப் படங்கள் தயாரிப்பதில் பிரபல விஞ்ஞானிகளே அதிக ஊக்கஞ் செலுத்தி வருகிறார்கள்.

**தொழிற் கல்வி**

பிலிம்மூலம் தொழிற்கல்வி யளிக்கும் முயற்சியும் ருஷ்யாவில் நடைபெறுகிறது. மோட்டார் டிரைவர்கள் எஞ்சின் டிரைவர்கள் முதலியோருக்கு பிலிம்மூலம் போதனையளிக்கப்படுகிறது. இந்தமாதிரி படக்காட்சிகளுக்கு, சம்பந்தப்பட்ட தொழிலாளிகள் கட்டாயம் செல்லவேண்டுமென்று வற்புறுத்தவும் படுகின்றது.

**குழந்தைகளுக்கு**

குழந்தைகளுக்கு எனப் பிரத்தியேகம் பிலிம்களும் தயாரிக்கப் படுகின்றன. இவை மிகக்குறுகிய நீளமுடையவை. இயற்கைசாஸ்திரம், பூகோளம், பௌதிகம் ரசாயனம், கைத்தொழில், சரித்திரம், முதலிய பலவகைப் பாடங்களிலுமாக சுமார் 130 பிலிம்கள் தயாரிக்கப்பட்டிருக்கின்றன.

**பிரான்ஸ் முன்னேற்றம்**

சென்ற வருஷம் படத் தேர்தலில் தேர்ந்தெடுக்கப்பட்ட படங்கள் பத்தும் அமெரிக்கப் படங்களாயிருந்தன. ஆனால் இவ்வருஷமோ அமெரிக்கப் படங்கள் மூன்றும், பிரெஞ்சுப் படங்கள் ஏழும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன. பிரான்சுக்கு அடுத்தபடியாக ஸ்வீடனும் படத்தொழிலில் விரைவில் முன்னேறி வருகிறதாம். இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் இப்பொழுது பிரெஞ்சுப் படங்களுக்கு அதிக கிராக்கி ஏற்பட்டுக்கொண்டு வருகிறதாம். பிரான்ஸைவிட அமெரிக்கா ஒரு வருஷத்தில் 20 மடங்கு அதிகமான படங்களைத் தயாரித்து வருகிறதாம்.

**'மிட்னைட் மெயில்'**

வீர ரமணி எனும் ஸ்டண்ட் படத்தைத் தயாரித்த பம்பாய் மோஹன் பிக்சர்ஸின் அடுத்தபடம் மிட்னைட் மெயில். இதில், மிஸ் யாஸ்மின் நாவீர், மாஸ்டர் ஷிராஸி முதலியோர் நடிக்கின்றனர் K. அமரநாத் டயரக்ட் செய்கின்றார்.

**குடியானவனின் சரிதை**

நவீன பிலிம்ஸ் தயாரிக்கப் போகும் தெலுங்கு சமூகப்படம். ஏ. கோபால்ராவ் டயரக்ட் செய்வார். தேசீய சம்பந்தமான கதை.



# நோட்டீஸ்

## தேவகோட்டை டிஸ்டிரிக்ட்டு முன்சிபு கோர்ட்டு

1938-ஹு O. S. No. 56.

எழுவங்கோட்டை தாலூகா அரியக்குடியில் இருக்கும் ராமசாமி செட்டியார் மகன் V. RM. N. RM. நாராயணன் செட்டியார் (1) ஷை தம்பி மைனர் V. RM. N. RM. வெங்கடாஜலம் செட்டியார் (2) ஷை மைனர் 2-ம் மனுதாருக்கு அடுத்த சினேகிதர் 1-ம் மனுதார் மூலம் — மனுதார்கள்.

மனுதார்கள் நாராயணன் செட்டியார் சம்சாரம் ஏகம்மை ஆச்சிக்கு வார்சு முறையில் மனுவில் கண்ட துகைக்கு வார்சு சர்டிபிகேட்டு கொடுக்க வேணுமாய் கோறி மனு தாக்கல் செய்து 4-10-38-ந் தேதி வாய்தா ஏற்பட்டிருக்கிற விபரம் இதன் மூலம் அறிவிக்கப்படுகிறது.

ஏ. சுந்தரமய்யர்.
வக்கீல்.
23—9—38.

**கல்விப் பிரசாரம்**

ஆரம்பக் கல்வியின் அவசியத்தை விளக்கும் படமொன்றைத் தயாரிக்க, பம்பாய் நகரசபைப் பள்ளிக்கூடக் கமிட்டி தீர்மானித்திருக்கிறது.

**நடிகர் சங்கம்**

சென்னையில் சினிமா நடிகர் சங்கம் ஸ்தாபிக்க முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. இது வகைக்கான பூர்வாங்கக் கூட்டம் அக்டோபர் 3உ சென்னையில் கூடலாம். சங்கம் அமைப்பதற்கு கே. சுப்பிரமணியம், எஸ். டி. சுப்புலட்சுமி, ரத்தினபாய் சகோதரிகள் முதலிய பலரும் ஆதரவளிக்கின்றார்களாம்.

**சினிமா விபத்து**

ஸெப்டம்பர் 18உ மதராஸ் யூனைடெட் ஆர்டிஸ்டிஸ் கார்ப்பரேஷன் கம்பெனியின் 3-வது வருஷக் கொண்டாட்டம் நடைபெற்றது. இதை முன்னிட்டு சென்னையிலுள்ள சில தியேட்டர்களில் அந்தக் கம்பெனியாரின் படங்கள் சில இலவசமாகக் காண்பிக்கப்பட்டன. இனமென்றால் கூட்டத்தைக் கேட்பானேன்? இடமிருக்கிறதா வென்பதைக் கவனிக்காமலே ஜனக்கும்பல் கொட்டகைகளுக்குள் புகுந்தன. கெயிட்டி தியேட்டரில் இதனால் பெரியவிபத்து ஏற்பட்டது. பலர் படுகாயமுற்றனர். ஒரு பெண் உயிர் துறந்தாள் இது சம்பந்தமாக விரிவான விசாரணை செய்யயும்படி சென்னை கார்பரேஷன் கவர்ன்மெண்டைக் கேட்டுக்கொள்வதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது.

**இத்துடன்**

சென்னையிலுள்ள தியேட்டர்களின் நிலைமையையும் விசாரித்து ரிப்போர்ட்செய்து, பொது ஜனங்களின் சௌகரியத்துக்கும் பாதுகாப்புக்கும் தகுந்த பரிகாரங்கள் செய்யும்படியும் சென்னை கார்ப்போரேஷன் கவர்ன்மெண்டைக் கேட்டுக்கொள்வதாகவும் அத்தீர்மானத்தில் குறிப்பிட்டிருக்கிறது. சென்னை நகரிலுள்ள தியேட்டர்கள் விஷயம் மட்டுமில்லாமல், வெளியூர்களிலுள்ள தியேட்டர்களின் நிலைமையையும் கவர்ன்மெண்டார் விசாரணை செய்து, பரிகரிக்க முன்வருவது அவசியமாகும். ஒவ்வொரு தியேட்டரிலும் எத்தனைபேர் அமர்ந்து சௌகரியமாகப் பார்க்கமுடியும் என்பதைக் கணக்கிட்டு, தொகையை வரையறுத்து, அதற்குமேல் ஆட்களை உள்ளே விடக்கூடாதவாறு தடுக்கத் தக்கவிதிகளையும், கண் காணிப்பு உத்யோகஸ்தர்களையும் ஏற்படுத்துவது அவசியமாகும். இவ்விஷயத்தில் கவர்ன்மெண்டார் சிரத்தையெடுக்க இது ஒரு நல்ல சந்தர்ப்பமாகும்.

One side page dark

